அடுத்த இதழ்....

உங்கள் தீபாவளி குதூகலத்தை
இரட்டிப்பாக்கும்

# சிறுகதை ஸ்பெஷல்!

● சுஜாதா ● வையவன் ● தோப்பில் முகமது மீரான் போன்ற முன்னணி எழுத்தாளர்களின் சிறுகதைகள்; வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும் நகைச்சுவைப் பகுதிகள்....

மற்றும்

**ரமணி சந்திரன்** எழுதும்

# மாலை மயங்குகின்ற நேரம்....

உருக்கமான குடும்பத் தொடர்கதை ஆரம்பம்

**அதிக பக்கங்கள்; அதே விலை!**




# அரசியலுக்கு அப்பாற்பட்ட தலைவர் கமல்!

சமீபத்தில் நடிகர் கமல்ஹாசன் மதுரைக்கு வந்திருந்தார். மாநிலம் முழுவதிலும் திரண்டு வந்த அவரது ரசிகர்களின் ஆக்ரோஷமும், அட்டகாசங்களும் மதுரை மக்களை பிரமிக்கச் செய்தன. தம் தந்தையின் நினைவாக நிழற் குடையைத் திறந்து வைக்க வந்திருந்த கமல்ஹாசன் சரியான போலீஸ் பாதுகாப்பு இல்லாததால் ரசிகர்களின் அன்புத் தொல்லையில் சிரமப்பட்டு விட்டார். கூட்டத்தில் ரசிகர்களின் பிரதானமாக விளங்கியது எது தெரியுமா? "அரசியல் என்பது சாக்கடை... எங்கள் தலைவர் அரசியலுக்கு அப்பாற்பட்டவர்" என்று ஒரு பெரிய நடிகரைத் தாக்கோ தாக்கு என்று தாக்கிக் கோஷமிட்டதுதான்!

சி.எல். சரவணன், மதுரை - 1.

## சர்ச்சில் சொன்னது!

பிரிட்டிஷ் பிரதமராக இருந்த சர்ச்சில் நாற்பது பக்கங்களில் ஒரு புத்தகம் எழுதினார். அதைப் படித்த ஒரு அன்பர் சர்ச்சிலிடம் 'இன்னும் அதிக பக்கங்களில் எழுதி இருக்கலாமே' என்றார். அதற்கு சர்ச்சில், "எனக்கு இன்னும் நேரம் இருந்திருந்தால் இதையே ஐந்து பக்கங்களில் சுருக்கி எழுதியிருப்பேன்" என்றார்.

## கோலத்தோடு ஒரு குறள்!

பொதுவாக எல்லா வீட்டுப் பெண்களும் தான் அதிகாலையில் வீட்டு வாசலில் கோலம் போடுகிறார்கள். இதைக் கூட வித்தியாமாகச் செய்ய வேண்டுமென்று எத்தனை பேர் நினைக்கிறார்கள்? மதுரை நகரில் லேடி டோக் (Lady Dook College) கல்லூரி சாலையில் ஒரு வீட்டெதிரில் தினமும் கோலம் போட்டு ஒரு திருக்குறளும் எழுதுகிறார்கள். வருடம் முழுவதும் தவறாமல் தொடர்கிறது இந்தத் தமிழ்ப் பணி.

ஓ.ஆர்.எஸ். மணியன், மதுரை - 2.

## ரசித்த வாசகம்!

சமீபத்தில், மதுரையில் ஒரு ஆட்டோ வாசகத்தை மிக ரசித்தேன்.

'We want peace of India, not pieces of India.' என்ன ஒரு ஆதங்கம்!

நாகபார்த்திபன், பிச்சம்பட்டி.

## 'எக்கோ' என்றால் 'யக்கோவ்!'

மதுரைக் கிராமப்புற பையன் ஒருவனிடம் ஒரு இன்டர்வியூவில் எக்கோ (Echo) என்றால் என்ன என்று கேட்கப்பட்டபோது அவன்,

அது தன்னுடைய மூத்த சகோதரி என்றானாம். ஏனெனில் கிராமப்புற மக்கள் தங்கள் மூத்த சகோதரியை யக்கா, யக்கோவ் என்றுதான் கூப்பிடுவார்கள். அப்படி யக்கோவ் என்று கூப்பிட்ட பழக்கத்தில்தான் அந்தப் பையன் எக்கோ என்றால் 'எக்கோவ்' என்று நினைத்து தனது மூத்த சகோதரி என்றானாம். மூன் றாண்டுகளுக்கு முன் இதைப் பற்றி ஒரு சந்சிகையில் படித்த போது வட்டார மொழியின் வலிமை பற்றி வியப்பாகவே இருக்கிறது.

டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

## "தென்னை மரம் மறைக்குதண்ணே!"

புதிதாக எங்கள் வீட்டிற்கு டீ.வி. வந்திருந்தது. மொட்டை மாடியில் நின்று 'ஆன்டெனா' வைக் கட்டிக் கொண்டிருந்த எனது தம்பியைப் பார்த்து, "ஆன்டெனாவை கொடைக்கானல் டீ.வி. டவரை பார்க்குமாறு கட்டுடா" என்றேன். அவனோ எங்கள் கொல்லையில் உயரமாக வளர்ந்திருந்த தென்னை மரங்களைக் காட்டி, "தென்னை மரம் மறைக்கு தண்ணே. மரத்தை வெட்டுங்க!" என்றானே பார்க்கலாம். எல்லோருக்கும் சிரிப்பு அடங்க ஐந்து நிமிடங்கள் ஆயிற்று.

மு. பாலமுருகன், மேல்மங்கலம்.

## வெள்ளையனை அசத்திய இந்தியன்!

இந்திய உணவு வகைகளைப் பற்றித் தெரிந்து கொள்வதில் ஆர்வம் உடைய வெள்ளைக்காரன் ஒருவன் கல்கத்தா வந்த போது, இரயில்வே ஃப்ளாட்பாரத்தில் கடை வைத்திருந்தவனிடம் ஜிலேபியைச் சுட்டிக் காண்பித்து, 'இது என்ன?' என்று கேட்டான். ஆங்கிலம் அரை குறையாகத் தெரிந்த கடைக்காரன் சற்று யோசித்து, "It is round and round and round and then stop" என்றான். அசந்து போன வெள்ளைக்காரன் அடுத்ததாக தயிரைக் காண்பித்து 'இது என்ன?' என்று கேட்டான். கடைக்காரன் சளைக்கவில்லை, சட்டென்று சொன்னான், "This is milk sleeping in the night morning it becomes tight!"

இரா. முரளி, மதுரை - 10.

## ஜோக்ஸ்!



"கல்யாணம் ஆன புதுசுல நானும் என் மனைவியும் 'ஹாப்பி'யா இருந்தோம்!"

"இப்போ?"

"எங்க சண்டைகளைப் பார்த்து அக்கம் பக்கத்துக்காரங்க 'ஹாப்பி'யா இருக்காங்க!"

— டிசம்பர்பூ, மதுரை - 1.

"மாநாட்டுக்கு இவ்வளவு பணம் செலவு செஞ்சு ஜனங்கள கூட்டிக்கிட்டு வந்திருக்கீங்களே. இந்தச் செலவையெல்லாம் எப்படி சமாளிப்பீங்க?"

"எங்க கட்சியில இருக்குற கை தேர்ந்த ஆளுங்க. மாநாட்டு கூட்டத்துல புகுந்து பிக்பாக்கெட் அடிச்சுக் கொண்டு வர்ற பணத்தை வச்சு சமாளிச்சிருவோம்!"

— வீ.பா. கிருஷ்ணன், மதுரை - 4.



"உங்க வீட்டிலே மதுரையா, சிதம்பரமா, சுவாமிமலையா?"

"ஆந்திரா."

"ஆந்திராவா?"

"ஆமாம், இப்ப என்னோட மருமகன் சொல்றபடிதான் எல்லோரும் நடக்கிறோம்!"

— மீனாட்சி பட்டாபிராமன், மதுரை - 3.

## 'மும்பாய்'க்காரர்களே!

ரெடியா? அடுத்து உங்கள் 'turn'. பம்பாய்... சே - மும்பாய் தொடர்பான கவிதை, கதை, துணுக்கு, ஜோக் என்று எதுவானாலும் போஸ்ட்கார்டில் எழுதி உடனே அனுப்புங்கள். மதுரை முடிந்ததும் மும்பாய்தான்! அதிக பட்சம் நான்கு வாரங்கள் உங்களுக்காகச் சில சிறப்புப் பக்கங்கள் ஒதுக்குகிறோம். புகுந்து விளையாடுங்கள்!

— ஆசிரியர்



**ப**ஞ்சகச்ச வேஷ்டியைப் போல் தைக்கப் பட்ட சல்வார், இடுப்பருகே இறுகிப் பின் குடை விரிப்பாக விரியும் - முழங்கால் வரை கொசுவம் வைத்த அனார்கலி டைப் கமீஸ், பளபளவென்ற நிறங்களில் சிந்தெடிக் கரிதார்... இவையெல்லாம் இப்போது போயே போச்சு! இட்ஸ் கான்! "நம்மூரு வெயிலுக்குத் தகுந்தபடி காட்டனுக்கு மாறிட் டோம்!" என்று கோரஸாகக் கண்சிமிட்டுகிறார்கள் கல்லூரிப் பெண்கள்.

"பொதுவாக வெள்ளை, பிஸ்கட் கலர் மற்றும் வெளிர் நிறங்கள்தான் இன்றைய ஹிட்!" என்று கூறுகிறார்கள் யாமினி, காயத்ரி ஷர்மிளி, ஆர்த்தி (அட்டையில் உள்ளவர்கள்) ஆகிய மூவரும். இவர்கள் பஞ்சாபி ஆடையணியும் இளைஞிகள் மட்டுமல்ல; அந்த ஆடைகளைப் புதிது புதிதாக டிசைன் செய்து உருவாக்கிக் கண்காட்சியும் விற் பனையும் செய்பவர்கள். இந்த ஆண்டு தீபாவளி ரிலீஸாக இவர்கள் டிசைன் செய்து விற்ற அறுபது எழுபது ஆடைகளில் சுமார் பத்து மட்டுமே ஆழ்ந்த நிறங்களில்!

"இந்த வெளிர்நிற மோகம் எல்லா இடங்களி லும் அதிகரித்துக் கொண்டு வருகிறது!" என்று ஆமோதிப்பவர் ரீனா அஞ்சாரியா. டெல்லியில் உடைகளைத் தைத்துப் பண்டிகைச் சமயங்களில் சென்னை போன்ற பெருநகரங்களில் விற்பனைக் கண்காட்சி நடத்துபவர் இவர். இவரும் இப்போது பாலியெஸ்டர் உடைகளை ஒதுக்கித் தள்ளி விட்டு, காட்டன் அல்லது பட்டில் மட்டுமே புதுப்புது டிசைன்களை உருவாக்குகிறார்.

"வெளிர் நிறமென்றாலும் அதில் வித்தியாசமான கைவேலைப்பாடு களையே பலரும் விரும்பு கிறார்கள்!"

## தீபாவளி ரிலீஸ்!

# தாவணி ப

என்று கூறும் ரீனாவின் டிசைன்களில் பளிச்சிடுவது குஜராத் மாநில கைவேலைப்பாடுகள். 'நல்லிகாகாம்' என்று அழைக்கப்படும் நுணுக்கமான ஜரிகை வேலை, பல வடிவங்களில் வெட்டப்பட்ட துணிகளை ஆடைகளில் மேலே வைத்துத் தைக்கும் 'அப்ளிக் வேலை, ஃபுல்காரி வேலைப்பாடு, துப்பட்டாக் களில் குஞ்சம், சிம்பிளான டிரஸ்ஸுக்கும் கவர்ச்சி தருகிற வகையில் டிஷ்யூ துப்பட்டா... என்று ஏரான டிசைன்கள்.

**வ**ங்காளத்திலிருந்து கொண்டு வந்து விற்கப் படும் கோஷ்மஜும்தாரின் சல்வார்கள் என்ன

சொல்லுகின்றனெ? அங்கேயும் கைத்தறி காட்டனில் கை வேலைப்பாடுதான்! 485 ரூபாயில் தொடங்கி 2100 ரூபாய் வரை விலையுள்ள ஒவ்வொரு உடையிலும் மேற்கு வங்கக் கிராமங்களின் நெசவுப் பாரம்பரியத்தின் நேர்த்தியைப் பார்க்க முடிகிறது.

"டாங்கெயில் காட்டன் என்றால் நூறு கவுண்ட். ஜாம்தானி காட்டனில் 120 கவுண்ட் என்று இழைகளின் எண்ணிக்கை மாறுபடும்!" என்று விவரிக்கிறார் கோஷ் மஜூம்தார். ஜாம்தானியில் செய்யப்படும் எம்ப்ராய்டரி வேலைகள் உலகப்பிரசித்தம்.

இவை தவிர, டாக்கா மஸ்லின் என்று கேள்விப்பட்டிருக்கிறோமே – மீட்டர் கணக்கில் துணியை மடித்தாலும் மோதிரத்திற்குள் நுழைத்து விடுகிற அளவுக்குத்தான் இருக்குமென்று – அந்த மஸ்லினையும் டாக்காவிலிருந்து

# துப்பட்டா!

மேற்கு வங்கத்திற்குக் குடிபெயர்த்துக் கொண்டு வந்து விட்டார்கள்! ஆம்; அந்த மஸ்லினை நெய்யும் சில குடும்பங்கள் டாக்காவிலிருந்து மே. வங்கத்துக்குக்





"சயின்ஸ் ரொம்ப முன்னேறிடுச்சுடா."
"எப்படிடா சொல்றே?"
"எங்க ஆபீஸ்ல 'ரோபோ' கூட தூங்குதுன்னா பார்த்துக்கயேன்!"

– தஞ்சாவூர் ராஜபாரதி

குடிபெயர்ந்ததால் கிடைத்த வரவு இது. ஆயினும் அந்த மஸ்லின் ரொம்பவும் மெலிதாக இல்லாமல் தைரியமாக உடுத்துகிற அளவுக்கே நெய்கிறார்கள் என்பதும் ஆறுதலான விஷயம். டாக்கா மஸ்லினில் சேலைகளும் உண்டு. விலை இரண்டாயிரம் மூவாயிரம் என்று இருந்தாலும் விரும்பி வாங்குகிறார்கள்.

மஜு™ம்தார் காட்டிய வேலைப்பாடுகளிலேயே நம் கவனத்தைக் கவர்ந்தது, கீதையின் சுலோகங்கள் நெய்யப்பட்ட ஒரு கமீஸ். காந்தி, நேரு, இந்திரா என்று தலைவர்களின் படங்களையும் நெய்கிறார்களாம்! கீதோபதேசக் காட்சியும் நெய்யப்படுகிறதாம்!

புதுமை என்கிற அளவில் ஒருபடி மேலேயே இருப்பவர்கள், நாம் ஆரம்பத்திலேயே சந்தித்த அட்டைப் பட இளைஞிகள் டீம். ஸ்ரீநிவாசலு, பகத் போன்ற இன்றைய ஓவியப் பிரபலங்களின் ஓவியங்களையே சற்று மாற்றி, துப்பட்டாக்களிலும் கமீஸ்களிலும் கைச் சித்திரமாகத் தீட்டித் தள்ளியிருக்கிறார்கள். ருத்திராட்ச மணிகள், துளசிமணிகள் என்று எதையும் விட்டு வைக்கவில்லை இந்தப் பெண்கள்.

"இப்போதைய ஃபாஷன்படி முழங்காலுக்குக் கீழே நீளம், சூரிஸ்லீவ்ஸ், சூரிபாட்டம் எனப்படும் முழு அளவு, சுருக்கங்கள் நிறைந்த கைகள், பைஜாமா, 'கல்லீஸ்' என்று கூறப்படும் குர்தாவில் உள்ள வெட்டுக்கள், நீளவாக்கு, குறுக்கு, சதுரம் சதுரமாக வைக்கப்பட்ட மடிப்புகள்... என்றுதான் விரும்பி வாங்குகிறார்கள். இத்தனைக்கும் சேர்த்து ஒரு புடைவையின் அளவான ஆறு மீட்டர் அளவு துணியே தேவைப்படுகிறது!" என்கிறார்கள் அவர்கள்.

இப்படிப்பட்ட புதுமைகளின் கோலாகலங்கள் ஒருபுறம் ஆர்ப்பாட்டப்படுத்திக் கொண்டிருந்தாலும் இன்னொருபுறம் 'மீண்டும் தாவணி' என்று நமது சொந்தப் பாரம்பரிய ஆடையை நினைவூட்டிக் கொண்டிருக்கிறார்கள் சென்னையிலுள்ள ராதா சில்க் எம்போரியத்தினர்.

இன்றைய நகர்ப்புற இளைஞிகள் முற்றிலுமாக மறந்து விட்ட ஓர் ஆடையை எந்த தைரியத்தில் விளம்பரப்படுத்தி விற்பனை செய்ய முன்வந்திருக்கிறார்கள் இவர்கள்?

"தாவணி என்பது ஒரு சிறுமி, இளம் பெண்ணாக மலரும் போது அணியும் உடை. அவளுடைய குழந்தைத்தனத்தையும் மென்மையையும் அதே சமயத்தில் குதூகலத்தையும் பிரதிபலிக்கும் ஒரே உடை பாவாடை தாவணிதான். இதை இன்றைய இளைய தலைமுறையினருக்கு நினைவுபடுத்தும் முயற்சிதான் எங்களுடையது!" என்கிறார்கள் ராசி தாவணியை அறிமுகப்படுத்தியிருக்கும் ராதா சில்க் எம்போரியத்தினர்.

**– நிர்மலா சக்ரவர்த்தி**

அட்டை வண்ணப்படமும், படங்களும் :
**ராஜு™நாராயண்**



## அதிசய ஆட்டோ!

நல்ல மழை. ஒரு ஆட்டோவைக் கூப்பிட்டோம். அவரும் வருவதாக ஒப்புக் கொண்டார். ஆனால் ஏறுவதற்கு முன் அவர் கூறியது : "என் வண்டியில் மீட்டர் பழுதாகி உள்ளது. சரியாகக் காட்டாது."

"நீங்க சரியான 'சார்ஜ்'ஜை சொன்னால் கொடுத்து விடுகிறோம்" என்றோம்.

போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்ததும் மீட்டர் ரூ. 11.90 காட்டியது. ஓட்டுனர் ஏதோ கணக்குச் செய்து விட்டு, "சரியான 'சார்ஜ்' ரூ. 8.50" என்றார். எங்களுக்கு மயக்கம் வராத குறைதான்!

'சரி'யென்று பத்து ரூபாய் கொடுத்தோம் மீதி ரூ. 1.50 கொடுத்து விட்டு 'நன்றி' சொல்லி விட்டுப் போனார்.

இது நடந்தது.... சென்னையில் அல்ல! கன்னிக்கோட்டை (கேரளா)யில்.

**- சீனு**
ஆதாரம் : **ஹிந்து**



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569


கந்தகோட்டம்
ஸ்ரீமுத்துக்குமாரசுவாமி

### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**
5 வருடங்கள்
ரூ.50,000/-
அதற்கு மேலும்

PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- விரைந்த சேவை.
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.

## பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிட்.



இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

# பெருமைப்படுத்திய பெய்ஸ்!



"விம்பிள்டன் போட்டியில் கலந்து கொள்ளாமல் வாய்ப்புக்களை வீணடித்துக் கொண்டிருக்கிறார்!" என்று குற்றச்சாட்டுக்கு ஆளானவர் லியாண்டர் பெய்ஸ்.

"சிறிய டோர்னமெண்ட்டுகளில் முனைப்பாக ஆடித் தேர்ச்சி பெறுவதையே இப்போதைக்கு நான் முக்கியமாகக் கருதுகிறேன்!" என்று அப்போது பதில் சொன்னார் இளைஞர் லியாண்டர் பெய்ஸ்.

இப்போது, இரண்டு முறை விம்பிள்டன் ஃபைனலிஸ்ட் ஆன க்ரோயேஷிய வீரர் இவானிசெவிக்கை, டேவிஸ் கோப்பை தகுதி - ஆட்டப் போட்டியில், தில்லி தேசிய விளை யாட்டுக் கழகப் புல்வெளி அரங்கில் தோற்கடித்து, இந்தியாவின் பெருமை யைக் கொஞ்சம் தூக்கி வைத்திருக்கிறார் பெய்ஸ். இத்தனைக்கும் உலக டென்னிஸ் சாம்பியன்கள் வரிசையில் இவானிசெவிக்கின் இடம் 6. அவருக்கு 115 இடங்களுக்குக் கீழேதான் பெய்ஸுக்கு இடம்!

சென்ற வாரம் நடந்த முதலாவது ஒற்றையர் ஆட்டத்தில் க்ரோயேஷிய வீரர் ஹிர்சனைத் தோற்கடித்தபோது, ஆட்டத்தில் பெரிய ஜொலிப்பு ஏதும் இல்லையென்றாலும், கடினமான மனஉறுதியுடன் ஆடினார் பெய்ஸ். 'செர்விங்'கில் பிரமாத அதிரடி எதுவும் காண்பிக்கவில்லை. இரட்டையர் ஆட்டத்தில், இவானிசெவிக்கையும் - ஹிர்சனையும் எதிர்த்து பெய்ஸும் பூபதியும் சளைக்காமல் ஆடி வெற்றிவாகை சூடிய போது, பெய்ஸுக்கு அளவில்லாத திருப்தி. இடதுகை ஆட்டக்காரரான இவானிசெவிக்கை மூன்று மணி நேரம் போராடி வென்ற போது, லியாண்டர் பெய்ஸுக்கு உடம்பு கூடச் சரியில்லை. "வயிற்றில் ஒரே இரைச்சல். ஒரே பாடாய்ப்படுத்தியது. ஒரு அன்டாஸிட் மாத்திரையை விழுங்கி விட்டு ஆடிக் கொண்டிருந்தேன்!" என்று வெற்றி பெற்ற பிறகுதான் தெரிவித்தார் பெய்ஸ். லியாண்டர் பெய்ஸ் இந்திய தேசிய கொடி யைத் தூக்கிப் பிடித்தபடி சக ஆட்டக்காரரும், காப்டன் ஜெய்தீப் முகர்ஜியும் உடன் வர மைதானத்தில் நடந்த போது, டேவிஸ் கோப்பை போட்டியில் இந்தியாவும் ஆடத் தகுதியை உருவாக்கிய சாதனையின் பெருமை தெரிந்தது. லியாண்டர் பெய்ஸ் கல்கத்தாக்காரர். தகப்பனார்தான் ஆரம்ப கோச்.

- சித்தார்த்

# THE TWO FACES OF THE IFB WASHING MACHINE



AS SEEN BY YOUR JEANS



AS SEEN BY YOUR CHIFFONS

Only an IFB Washing Machine is capable of treating your filthy jeans and exquisite Chiffons differently. Here's how it's done:

**The Gentlest Wash:** The Tumble Wash system handles your expensive Chiffons gently. It's the closest you can get to actually washing your clothes yourself.

**The Toughest Wash:** The Pre-wash facility gives dirty jeans an initial soak to dislodge dirt. Then, the main wash goes to work. With its powerful motor and Stainless Steel Drums (both inner and outer), the IFB Washing Machine makes light work of the heaviest loads. And, that's only the beginning.

**Temperature Control:** Washes clothes at any setting from room temperature to 95°c. For the removal of stains and better detergent action.

**3 Rinses and 2 Spin Cycles:** To remove detergent completely.

**Faster Spin Cycle:** To dry your clothes in no time.

**Lowest Water and Detergent consumption:** Only 70 litres of water and 50% less detergent, for a full 5 kg load.

To fully appreciate the capabilities of the IFB Washing Machine, drop in at any IFB Dealer for a demonstration. You'll soon find out why clothes are happiest in an IFB!




**IFB**

THE WORLD'S MOST ADVANCED WASHING SYSTEM.



Mudra:IFB:2932:95

**MANUFACTURED BY IFB INDUSTRIES LTD.: Sales Offices in India:** Ahmedabad: Ph:460628; Bangalore: Ph:2242725, 2274091; Bombay: Ph: 6408914, 6425577, 6432977; Calcutta: Ph:4758291; Chandigarh: Ph:45968; Cochin: Ph:364029; Goa (Panjim): Ph:224536, 223681; Hyderabad:811562; Indore: Ph:467190; Lucknow: Ph: 273161; Madras: Ph: 4349080; 4349486; New Delhi: Ph:6425984, 6425985, 6422569; Pune: Ph:627530, 626972.

நான்காவது பெண்கள் மாநாட்டை ஒட்டி பிரிட்டிஷ் கௌன்சில் நடத்திய, மௌனக் குரல் நாடகம் வீரியமாகவே அரங்கேறியது...



# புதுமைப் பெண்களின் மௌனக் குரல்!

**பெ**ண்களை இதுவரை புராணங்களிலும் பழங்கதைகளி லும் ஒடுக்கியும் ஒதுக்கியுமே வைத்த போது அவர்கள் குரல்கள் அன்று யாருக்கும் கேட்கவில்லை. ஆனால் இந்த இருபதாம் நூற் றாண்டில், அடக்கி வைக்கப்பட்ட குரல்கள் ஒலிக்கும் போது, அவை சொல்லும் செய்திகள் என்னவாக இருக்கும்?

டாக்டர் வி. பத்மா என்கிற 'மங்கை', தன் கற்பனையில் இரு பாத்திரங்களை மட்டும் உருவாக்கி, அவர்களின் மௌனக் குரலை ஒலிக்கச் செய்திருக்கிறார்.

குறவஞ்சி இலக்கியத்தை அடிப் படையாக வைத்திருப்பதால், குற வன் - குறத்தியும் இதில் உண்டு. தன்னிடம் குறிசொல்லக் கேட்கும் பெண்களை, 'நீ சீதை போல் வாழ் வாய்!' என்றும், 'நீ திரௌபதி மாதிரி வாழ்வாய்!' என்றும் குறத்தி சொல்கிற போது, அவர்கள் அன் றைய ஆணாதிக்க உலகில் எப் படிக் கொடுமைக்கு உள்ளானார்கள் என்ற சினத்தில் இவர்கள் சிற, குறத்தி விளக்குகிறாள்.

ராமன் மனம் மாறி, மறுபடி சீதையை அழைக் கிற போது, தன் சுயகௌரவம் காத்து, 'மண்ணையே அடைந்தாள் - அவள் தாயையே அணைந்தாள்' என்கிறாள் குறத்தி.

'பலிகடா ஆன பின்னும் தன் பழி தீர்த்தாள் பாஞ்சாலி' என்று திரௌபதியின் வெற்றியை எடுத்துச் சொல்லுகிறாள் குறத்தி.

**அ**ந்தப் பெண்களின் சிறல்களில் பலருக்கும் கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் சம்பிரதாய நாட்டிய அமைப் பைக் கொஞ்சம் ஓரமாக ஒதுக்கி வைத்து, கூத்துப்பட்டறை பாணியில், பாடி மூவ்மெண்ட்டுக்கு முக்கியத்துவம் கொடுத்து இந்த நடன - நாடகத்தை வடிவமைத்த இளைஞர் சத்தியஜித்துக்கு, அம்மா சாந்தா தனஞ்செயன் கன்னத்தில் செல்லமாகக் கொடுத்த முத்தம், நியாயமான பாராட்டு!

கலாக்ஷேத்திரா நாடகங்களில் ஊறிய தனஞ்செயனுக்கு இது ஒரு சவாலாக இருந்திருக்குமோ என்னவோ. ஆனால் பிரிட்டிஷ் கௌன்சிலும் ரசிகர்களும் தம் மீது வைத்த நம்பிக்கையைப் பொய்த்துப் போகாமல் காப்பாற்றியிருக் கிறார் தனஞ்செயன்.

நிகழ்ச்சியின் இன்னொரு முக்கிய அம்சம், திரை இசை அமைப்பாளர் வி. எஸ். நரசிம்மனின் இசை. அவரது வய லின் துல்லியமாய் ஸ்டீரியோபோனிக்கில் ஒலித்தது. நடே ஷின் அரங்க அமைப்பும், ஒளியமைப்பும் நாடகத்தின் பெரிய ப்ளஸ் பாயிண்ட்டுகள். இத்தனை மென்மையைச் சமீபத்தில் வேறு எந்த மேடையிலும் பார்த்ததில்லை.

தமிழ்நாட்டின் வேறு நகரங்களில் உள்ளவர்களும் இதைப் பார்க்க வாய்ப்புத் தர வேண்டும்.

- **சாருகேசி**

புகைப்படங்கள் : **சத்யஜித்**

10

# இருட்டு அரண்மனைகள்

சில தினங்கள் சென்று தருமமிகு சென்னை மாநகரில் மீண்டும் ஒரு குண்டு வெடித்தது. இந்த முறை அதிலே ஓர் அங்கத நகைச்சுவை இருந்தது. போலீஸ் டி.ஐ.ஜி. மருதகாசி வீட்டிலே வெடித்தது என்பதுதான் அசல் குண்டை விடவும் பெரிய குண்டு! வீட்டின் வாசல் பக்கம் சில பகுதிகள் தகர்ந்து, சிமிண்டும் காரையும் உதிர்ந்தன.

ஃபோன் மூலம் செய்தி தெரியவந்ததும் இன்பசாகரன் அடக்கமாட்டாமல் சிரித்து விட்டான்.

மறுமுனையில், "சிரிக்கிற விஷயமாய்யா இது?" என்று கேட்டார் மேலதிகாரி மயில்வாகனம். "நல்லவேளை உயிர்ச் சேதம் ஏதும் இல்லாமல் போச்சேன்னு நான் பெருமூச்சு விட்டுக்கிட்டிருக்கேன்."

"போலீஸோட இமேஜுக்குத்தான் ஸார் பலத்த சேதம்!"

"அடப்பாவி! அதுக்காகவா சிரிக்கிறே? அப்படி மருதகாசிகிட்டே சொல்லி வைக்காதே! 'சி.பி.ஐ. மட்டும் என்ன வாழ்ந்தது'ன்னு திருப்பிக் கேட்பான். இன்னும் தீர்க்கப்படாமல் இருக்கும் கேஸ்களை அடுக்குவான்."

"அவங்க ஒத்துழைச்சாத்தானே ஸார்? இந்த கேஸையே எடுத்துக்குங்க. எவ்வளவோ முன்னேறியிருக்கலாம். அவங்களும் செய்ய மாட்டாங்க, நம்மையும் செய்ய விட மாட்டாங்க."

"தெரிஞ்ச கதைதானே. எதிர்ப்புகள், தடைகளை மீறி வெற்றி பெறுவதில்தான் பெருமை."

"ஸ்பாட்டுக்குப் போய் பார்த்துட்டு வரலாம் ஸார். மருதகாசியிடம் காப்பி டிபன் கேட்போம்."

"பச்சைத் தண்ணி கூட தர மாட்டான். அவன் சாதா தண்ணியே குடிக்கிறதில்லே. கார்ப்பரேஷன் தண்ணியை நம்ப முடியாது; எல்லாவித கிருமிகளுக்கும் அடைக்கலம் தருவதே அதுதான் என்பான்."

"அப்ப மினரல் வாட்டரா?"

"வீட்டிலே பிரமாத பார் வைச்சிருக்கான்யா. எல்லா வெரைட்டியும் உண்டு. காக்டெய்ல் ஸ்பெஷலிஸ்ட்."

"இந்தக் காலை நேரத்தில் கூடவா?"

"அதனாலதான் இப்ப நான் வரலை. நீ போயிட்டு வா. காப்பி ஆசாமி."

"ஓ.கே." கூறிவிட்டு குளிக்கச் சென்றான். அனுபமா தன் மீது வீசிய குண்டு இதைவிட



# கி. ராஜேந்திரன்

வும் பயங்கரமானது. ஆர்.டிஎக்ஸ் என்று நினைத்தான். இதயத்தைப் பிளந்து காயப்படுத்தியது. என்ன சொன்னாள்? 'இந்த உடலை உங்களுக்குக் காணிக்கை ஆக்குவதன் மூலம்தான் என் காதலை நிரூபிக்க முடியும் என்றால் அதற்கும் இப்போது நான் தயார்' என்றாள் அல்லவா!

அவனுக்கு சப்தநாடியும் ஒடுங்கிப் போனது. பதில் கூற அவன் வார்த்தைகளைத் தேடுவதற்குள் ஆவணி மாதத்துக் கருமேகங்கள் உதவிக்குத் திரண்டு வந்தன. திடுமென்று ஓர் இடி இடித்தது. "வா, உள்ளே போகலாம்" என்று கையைப் பற்றி அழைத்துக் கொண்டு மொட்டை மாடியிலிருந்து வாசலுக்கு மாடிப் படி பக்கம் வருவதற்குள் சடசடவென்று பெய்த மழை சட்டையை ஊடுருவி நனைத்து விட்டது.

'ஒருவேளை அவள் காதலை ஏற்றுக் கொண்டு அவளையே கல்யாணம் செய்து கொண்டிருந்தால் வாழ்க்கை நிம்மதியாய் இருந்திருக்குமோ? தவறு செய்து விட்டோமோ?' என்று இப்போது நினைத்த போது ஷவரின் ஜில் தண்ணீர் முள்ளாக இறங்க, உடல் சில்லிட்டுச் சிலிர்த்தது. துவட்டிக் கொண்ட போது, 'தவறு ஏதும் நடந்து விடவில்லை' என்பதில் உறுதியானான். அவள் தன்னை மறக்க முடியாமல் தவிப்பதும், அவள் அப்பா வரன் பார்ப்பதைத் தடுப்பதும், திருமணத்தைத் தவிர்ப்பதும் துரதிர்ஷ்டம்தான். ஆனால் அவளைத் தான் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் அது இன்னும் பெரிய துரதிர்ஷ்டமாக இருந்திருக்கும்.

குற்ற உணர்வின் விளைவான ஒரு தாழ்வு மனப்பான்மை தன்னை ஆட்டிப் படைக்கும். காதலுக்காக அன்றி ஒரு கடமையாகக் கருதி அவளைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பதாக அவளுக்குத் தெரிய வரும்போது ஏற்படும் ஏமாற்றம், இல்வாழ்க்கையை நரகமாக்கி விடும்.

இப்போது உள்ள மனநிம்மதி அப்போது நிச்சயம் இருக்காது. உத்யோகரீதியில் ஆயிரம் விதமான யோசனைகள் இன்றும் உண்டு என்றாலும் வீட்டில் குழப்பமில்லை. சாயாவுடன் இப்போதும் சண்டை பூசல் உண்டு. ஆனால் அது எல்லாமே வெளிப்படை. ஒளிவுமறைவு இல்லை. நிழல் யுத்தம் இல்லை அது.

ஆவி பறக்கும் இட்டிலிகளை சாயா டைனிங் டேபிள் மீது தயாராக வைத்திருந்தாள். இன்னத்தில் கொத்சு. விண்டு தோய்த்து வாயில் போட்டுக் கொண்டான். மருதகாசியை நம்பிப் போனால் வயிறு காயும் ஆபத்து உண்டு.

"என்ன அவசரமோ" என்றாள். "ஒரு நாளாவது இருந்து நிதானிச்சு ருசிச்சு சாப்பிடக் கூடாதா?"

"ரசிச்சேனே! கொத்சு பிரமாதம். இந்தக் கை மணமே அலாதி" என்று விரல்களை முத்தமிட்டான். அளவான, அழகான, மிருதுவான



விரல்கள். இத்தனை பத்து பாத்திரம் தேய்த்தும் தினம் தினம் சமையலுக்கு புளி கரைத்தும் கூட மென்மையாக இருந்தன! சின்னியின் காலடி யோசை கேட்டதால் பற்றிய கரத்தை நழுவ விட்டு, "வாய்க்கு ருசியா பண்ணிப் போடறே, சம்பாதிக்கவும் செய்யறே. உலகில் உள்ள என்னைப் போன்ற குணசாலிகளான எல்லா ஆண்களுக்கும் உன்னைப் போன்ற சிறந்த மனைவி அமையக் கடவது" என்றான்.

"ஐஸ் குளிரில் உச்சந்தலை உறைஞ்சு போச்சு" என்று அவள் கூறி முடிப்பதற்குள் அவன் யமாஹா ஏற படிகள் இறங்கியிருந் தான்.

மருதகாசி வீடு இமிலோகப்பட்டுக் கொண்டிருந்தது. போலீஸ்காரர்கள், அமைச்சர்கள், அதிகாரிகள் என்று பெரிய பட்டாளமே திரண்டிருந்தது.

ஒரு பக்கமாக அழுகுக் கதிர்களை அள்ளி வீசிக் கொண்டிருந்த அனுபமா. நெருங்கி னான். "இப்படி கூட்டம் போட்டா எங்க வேலை எப்படி நடக்கும்? இருக்கிற தடயங்கள் எல்லாத்தையும் அழிச்சுருவாங்க, கலைச்சுரு வாங்க" என்றாள்.

"வேறே எங்கேயாவது தாக்குதல் நடந்தா போலீஸ் கெடுபிடி பண்ணும். இங்க போலீஸ் தலைமையே தாக்கப்பட்டிருப்பதால் தடுமாறிட் டாங்க போல."

"அப்புறமா எங்களையே குறைசொல்லு வாங்க. 'தடய அறிவற்ற இயல்'னு பட்டம் சூட்டறாங்க."

"அறிவுபூர்வமா பார்த்தா உனக்கு எப்படி தெரியுது?"

"மாலடோவ் காக்டெய்ல்."

"மருதகாசி வீட்டுக்கு வந்ததும் 'காக்டெய்ல்' ஞாபகம் வந்துருச்சா?"

சிரித்தாள். மருதகாசியின் பலவீனம் டிபார்ட்மெண்டில் எல்லாருக்கும் தெரிந்த ஒன்று. விளக்கினாள் :

" 'மாலடோவ் காக்டெய்ல்'ன்றது 'பெட் ரோல் பாம்'முக்கு இன்னொரு பெயர். அதிக சேதம் விளைவிக்காது. தயாரிக்கிறது ரொம்ப சுலபம். காலி பாட்டிலில் பெட்ரோல் நிரப்பி அடிவாரத்தில் கொஞ்சம் கந்தக அமிலம் இருக்கிற மாதிரி பார்த்துக்க வேண்டியது. பாட் டிலை டைட்டா மூடி மேலே பசை, சர்க்கரை, பொட்டாஷியம் குளோரேட் கலவையைப் பூச வேண்டியது. பசை இறுகிக் காய்ந்ததும் பாட் டிலை ஒரு காகிதத்தில் சுற்றி எடுத்துப் போக லாம். இலக்கைக் குறிவைத்து எறிய, பாட்டில் உடைந்து, கந்தக அமிலம், சர்க்கரை-குளோ ரேட் கலவையுடன் இணைசேர, பயங்கர வெடிச் சப்தம் கிடுகிடுக்கச் செய்யும். பெட் ரோல் காரணமாக தீப்பற்றிப் பரவும்."

"காம்பவுண்டு சுவருக்கு வெளியே இருந்த படியே சுலபமா வீசியிருப்பான்."

"மருதகாசியை பயமுறுத்துவது மட்டுமே நோக்கம்; தீர்த்துக் கட்டும் எண்ணம் இல்லே. அப்படியிருந்தா இதைவிடப் பெரிய குண்டு பயன்படுத்தியிருப்பான்."

"மிரட்டுகிற நோக்கம் கூட இல்லேன்னு தோணுது, அனு. ஒரு தமாஷ். 'என்னடா, அகில பாரத இந்து பரிவார் கட்டடத்துக்குக் குண்டு வைச்சவனைப் பத்து நாள்ல பிடிக்கிறேன்னு கெடுவைச்சு பத்திரிகைக்காரங்களுக்கு பேட்டி கொடுத்தியே, என்ன கிழிச்சே? இப்ப உன் வீட்டிலேயே குண்டு வீசியிருக்கேன். என்ன சொல்றேன்'னு ஒரு கிண்டலான சவால்!"

"இருக்கலாம்" என்றாள்.

டி.ஐ.ஜி. இவனைப் பார்த்து விட்டு முன் னேறி வந்து கொண்டிருந்தார்.

"கழுகுக்கு மூக்கிலே வேர்த்துருச்சா?" என்று கேட்டவாறே அவனை நெருங்கினார்.

"உங்க வெற்றியிலே பங்கு கேட்டு வந்தா தப்பு. ஒரு சங்கடத்துல சிக்கும் போது அனு தாபப்பட்டுக் கூடவா வரக் கூடாது?"

"டி.ஐ.ஜி. வீட்டிலேயே குண்டு வீசிட் டான்னு கேலி பண்ணுறியா? எனக்கு ஒன் ணும் சங்கடமில்லே. குண்டு வீசினவனை செக்யூரிடி பார்த்திருக்கான். விவரமா அடை யாளம் சொல்றான். கம்ப்யூட்டர் ஸ்கெட்ச் தயாராக வேண்டியதுதான் பாக்கி."

"விட்னஸ்ஸைக் கூப்பிடுங்க; ஒருவேளை இந்த ஆளா பார்க்கச் சொல்லுங்க." பாக் கெட்டிலிருந்து பென்ஜமின் படம் எடுத்தான்.

மருதகாசி ஜாடை காட்ட, சற்று தொலைவில் நின்ற ஒரு போலீஸ்காரர் வந்து, சல்யூட் அடித்து, படம் பார்த்து, பரபரப் படைந்து, "இவன்தான் ஸார், இவனேதான்" என்றான். "நேரில் பார்த்துப் போட்ட மாதிரி படம் அமையலேன்னாலும் இவன்தான்,

## முதல்வர் வீட்டுத் திருமணம்!

"இருபது ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற மற்றொரு முதல்வரின் வீட்டுத் திருமணம் இன்று ஞாபகத்திற்கு வருகிறது. கம்யூனிஸ்ட் (CPI) தலைவர் அச்சுதமேனன் கேரளாவின் முதல்வராக இருந்த போது அவர் மகள் திருமணம் நடை பெற்றது. அவர் கேரளாவின் மொத்த ஜனத்தொகையான மூன்று கோடி மக்களையும் அழைத்தார்! தம் கட்சிப் பத்திரிகையான ஜன யுகத்தில் சிறு நோட்டீஸ் மாதிரி ஒரு தாள் இணைத்து அனுப்பினார். அதில் 'அன்பளிப்புகள் ஏற்கப்படமாட்டாது' என ஒரு குறிப்பும் இருந்தது. திருமணத்திற்கு வந்த ஒவ்வொருவரும் மேனனால் நேரிடையாக உபசரிக்கப்பட்டனர். ஒரு குளிர்பானம், ஒரு எலுமிச்சம்பழம், வாசனையில் தோய்த்த பஞ்சு ஆகியன அனைவருக்கும் வழங்கப்பட்டன! ஹூம், அதுவும் முதலவர் வீட்டுத் திருமணம்தான்!

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்; தகவல் : ஜானகி ரங்கநாதன்

# தீபாவளித் திருநாளில் உங்கள் செல்வங்களுக்கு ஒளி கூட்டுங்கள்




நீங்கள் தீபாவளியை கோலாகலமாகக் கொண்டாட, துகர் உங்களை வாழ்த்துகிறது. கொண்டாட்டங்களுக்கு இடையே துகரில் உங்கள் சேமிப்பை துவக்க மறவாதீர்கள். இந்த தீபாவளி உங்கள் எதிர்கால வளத்திற்கு வழி காட்டும் ஒளிவிளக்காக விளங்க துகர் அளிக்கும் சிறந்த வழி.



## DUGAR
## FINANCE INDIA LTD

REGD. OFFICE: DUGAR TOWERS, 123 MARSHALLS ROAD, MADRAS 600 008. PH; 8553535(10 LINES) FAX: 8554864

■ HIRE PURCHASE ■ LEASING ■ PROPERTY DEVELOPMENT ■ PUBLIC DEPOSIT ■ MERCHANT BANKING ■ FOREIGN EXCHANGE ■ SHARE POINT ■

**BRANCHES:**

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | COIMBATORE | ☎ | 231867 | SALEM | ☎ | 418769 |
| MADRAS | | | BANGALORE | ☎ | 5585599 | ERNAKULAM | ☎ | 369515 | SECUNDERBAD | ☎ | 846006 |
| ADYAR | ☎ | 4917700 | JAYANAGAR | ☎ | 641511 | GUDUR | ☎ | 51830 | TIRUPATI | ☎ | 21977 |
| MOUNT ROAD | ☎ | 8521888 | MALLESWARAM | ☎ | 365276 | GUNTUR | ☎ | 353977 | TRICHY | ☎ | 469852 |
| T.NAGAR | ☎ | 4341541 | BOMBAY | ☎ | 2046165 | MADURAI | ☎ | 36106 | VISHAKAPATNAM | ☎ | 546581 |
| MYLAPORE | ☎ | 4942256 | CALICUT | ☎ | 63344 | NELLORE | ☎ | 27576 | VIJAYAWADA | ☎ | 478194 |

This advertisement appears further to the statutory advertisement published in Economic Times dated 12/11/94. The text of the advertisement is also printed on all deposit application forms.

TAKEWING 840 - D1 - TN - K

சந்தேகமில்லே."

"ஹிந்து பரிவார் கட்டடத் தகர்ப்பிலும் இவன்தான் சம்பந்தப்பட்டிருக்கான்" என்று கூடுதல் தகவல் தந்தான் இன்பா.

"வாட் நான்ஸென்ஸ்! குற்றவாளியை இனம் காட்டக்கூடிய இவ்வளவு முக்கியமான படம் வைச்சுக்கிட்டு என்கிட்ட இத்தனை நாள் காட்டாம இருந்திருக்கியே?" என்று பாய்ந்தார் மருதகாசி.

"நீங்கதான் சி.பி.ஐ. உதவி வேணாம், தேவைப்பட்டா சொல்லி அனுப்பறேன்னீங்க."

"தமிழக அரசின் பர்மிஷன் இல்லாம கேஸிலே சி.பி.ஐ. நுழையறது தப்பு, தெரியு மில்லே?"

"அப்ப படங்களைக் கொடுத்திடுங்க; நான் வந்த வழி திரும்பறேன்."

மருதகாசி யோசித்தபோதிலும் அப்படி காட்டிக் கொள்ளவில்லை. வேகமாக முடிவுக்கு வந்து, "ரொம்ப பிகு பண்ணிக்காதேய்யா, ஸி.எம். கிட்ட பேசி, சி.பி.ஐ. சம்பந்தப்பட உத்தரவு வாங்கிடறேன். இப்ப இவனைப் பற்றி சொல்லு..."

"வெளிநாட்டு ஆசாமின்னு சந்தேகிக்க இடமிருக்கு; பேரு பென்ஜமின்."

"அயல்நாட்டான் இங்க வந்து எதுக்குக் குண்டு வீசணும்?"

"அதைத்தான் நாம கண்டுபிடிக்கணும்."

"எங்க, எப்படி இவனைப் படம் எழுதினே? யாரு சொன்னாங்க, ஃபாரின் ஆளுன்னு? பேரு எப்படி தெரிஞ்சுது?"

"அதான் சி.பி.ஐ. சாமர்த்தியம். நான் பார்த்த ஒரு நாடகத்துல, 'தோசை தோசை தான்; சப்பாத்தி சப்பாத்திதான்'னு ஒரு டய லாக். அது மாதிரி சி.பி.ஐ. சி.பி.ஐ.தான்; போலீஸ் போலீஸ்தான்!"

அனுபமாவின் 'களுக்' மருதகாசியின் கோபத்தைக் கிளறியது. அவளைக் கண்களால் 'பொசுக்கி' விட்டு இன்பாவுக்கு பதில் சொன்னார் : "ரொம்ப அலட்டிக்காதே! படங்கள் என்கிட்ட இருக்கட்டும். நாளைக்கு எல்லா பேப்பர்லயும், "தகவல் தந்தா கணிசமான பரிசு"ன்ற அறிவிப்போடு பிரசுரிக்கிறேன்."

"அதோட ஏர்போர்ட், ஹார்பர் எல்லாம் அலர்ட் பண்ணிடுங்க. ஆளு கம்பி நீட்டிடப் போறான்."

"நான் நினைச்சேன், சொல்லிட்டே" என்று கூசாமல் பொய் சொன்னார் மருதகாசி. "இன்டர்போலுக்கு படத்தை ஃபாக்ஸ் பண்ணி மேற்கொண்டு விவரங்கள் ஏதும் கிடைக்குமா, பார்க்கறதுதானே?" என்றார் மீசை தடவி.

பதிலுக்குக் கட்டை விரல் உயர்த்தி, "அதை நாலு நாள் முந்தியே செய்துட்டேன். இதுவரை தகவல் இல்லை. பாரீஸ் ஹெட் குவார்ட்டர் லிருந்து எல்லா ஐரோப்பிய தலைநகர்களுக்கும் செய்தி அனுப்பி, பதில் பெற கொஞ்சம் தாமதமாகத்தான் செய்யும்" என்றான் இன்பா.

**நா**ளிதழில் பென்ஜமினின் படமும் பரிசு அறிவிப்பும் வந்திருந்த பகுதியை அடாணா ராகத்தில் படித்துக் கொண்டிருந்தார் ரங்கநாதன்.

"அப்பா! நீங்க பாடறதைக் கேட்க நேர்ந்தா பயந்து போய் அவனே சரணடைஞ்சுடுவான்" என்று இன்பா கூற, சின்னியும் தாத்தாவும் சிரித்தனர்.

அடுப்படி காரியம் என்றாலும் அப்பாவும் பிள்ளையும் பேசிக் கொள்வது தன் காதில் விழாமல் போய் விடக் கூடாது என்பதில் கருத்தாக இருந்தாள் சாயா.

"உதகை சூரியாசுவாமி ஆசிரமத்துக்கு பென்ஜமின் ஒரு முறையேனும் வந்து போயிருக்கலாம் என்று நம்ப இடமிருக்கிறது. ஆனால் சூரியாசுவாமிக்கும் அவனுக்கும் ஆன் மிகத் தொடர்புக்கு அதிகமாக வேறு ஏதும் இருக்கும் என்று தோன்றவில்லை" என்ற இன்பா, பென்ஜமினை மறந்து குருஜி பற்றிப் பேச ஆரம்பித்து விட்டான். "பரம ஞானி; என்னை கணப்போதில் எடை போட்டுட்டார்; எவ்வளவு எளிமையான, அதே சமயம் தத்துவார்த்தமான உபதேசங்கள்! அவ்வளவிருந்தும் எத்தனை அடக்கம்! என்னிடம் நியாயமா கோபப்பட்டிருக்கலாம், ஆனால் பரிவு காட்டினார் மகான்!"

அவன் அடுக்கிக் கொண்டே போக, 'ஒரு தடவையாவது கண்டிப்பா நாமும் பார்த்து விட்டுத்தான் வரணும்' என்று எண்ணினாள் சாயா.

"எனக்குத் துளிக்கூட பிடிக்கவே இல்லை" என்றான் சின்னி. உடனே சாயாவின் மதிப்பில் சுவாமிஜி மேலும் உயர்ந்தார். "உன் அபிப்பிராயத்தை யார் கேட்டா?" என்று சின்னியை நோக்கிக் குரல் கொடுத்தாள்.

"பயலுக்குப் போர் அடிச்சுருச்சு; மீன் குழம்பு வாசனையைப் பிடிச்சுக்கிட்டே ஆசிரமத்தில் தோட்டக்காரர்கள் குடியிருப்புக்குப் போயிட்டான்" என்றான் இன்பா. சாயாவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. "இன்னிக்கு மீன் குழம்பு, நாளைக்கு மட்டன் பிரியாணி... தூ! தூ!"

சின்னியோடு சேர்ந்து வாழ்வது அவளுக்கு இதுவரை கயிற்றின் மேல் நடக்கும் சாகசம் என்றால் இனி முள்ளின் மேல் நடக்கும் வேதனை!

அருவருப்பு மாறாமலே வேலைக்குச் சென்றான். மூன்றாவது பீரியட்டின் போது கூரியரில் ஒரு பாக்கெட் வந்தது. மேலே : PHOTOS - DO NOT FOLD.

(தொடரும்)




1995 அக்டோபர் 8

யுவ புரட்டாசி 21

மலர் : 54

இதழ் : 10

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# பொய்களால் ஒரு மாளிகை!

தமிழக முதல்வர் ஜெயலலிதா, அடுக்கடுக்காய்ப் பொய்கள் நிரம்பிய அறிக்கைகளை வெளியிட்டிருக்கிறார் என்பது அழுத்தந்திருத்தமாக நிரூபிக்கப்பட்டுள்ளது.

சசிகலா தமது உடன்பிறவா சகோதரி என்றும் அவர் மீது அபாண்டமாய்ப் பழி சுமத்தப்படுகிறது என்றும் சில காலம் முன் கூறினார் முதல்வர்.

இப்போது அந்த உடன்பிறவா சகோதரியும் அவர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அந்நியச் செலாவணி மோசடியில் ஈடுபட்டதற்கான ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன.

சசிகலாவின் சகோதரி மகனும் ஜெ.ஜெ. டீ.வியின் நிர்வாக இயக்குனருமான பாஸ்கரன் கைது செய்யப்பட்டுள்ளார். சசிகலாவும் முதல்வரின் வளர்ப்பு மகன் சுதாகரனும் விசாரணைக்கு அழைக்கப்பட்டுள்ளனர். தினகரன் மீது கைது வாரன்ட் பிறப்பிக்கப்பட்டு அவர் தேடப்பட்டு வருகிறார்.

வளர்ப்பு மகன் திருமணச் செலவுகள் குறித்து நாளிதழ்களிலும் பத்திரிகைகளிலும் வெளியான செய்திகளை மறுத்தார் ஜெயலலிதா. ஆனால் திருமணத்துக்கு உணவு சமைத்த ஒரு சமையற்காரரின் பேட்டியே முதல்வரின் மறுப்பு எவ்வளவு பொய்யானது என்று உணர்த்தி விட்டது.




திருமணச் செலவுகள் குறித்து விசாரித்த வருமான வரித்துறை அதிகாரிகள் சம்பந்தப்பட்ட கான்ட்ராக்டர்களையும் சிப்பந்திகளையும் வற்புறுத்தி, மிரட்டி, பொய்யான புள்ளி விவரங்களைப் பெற்றதாகக் குற்றம் சாட்டினார் ஜெயலலிதா.

இதனை பகிரங்கமாக மறுத்ததுடன், என்னென்ன விசாரணைகள் எப்படி நடத்தப்படுகின்றன என்பதைத் திறந்த அறிக்கையாகக் கொடுத்து விட்டார் வருமானவரித் துறை தலைமை அதிகாரி.

ஆக, ஜெயலலிதா பினாமிகளை வைத்து, கோடிக்கணக்கான ரூபாய்களை முறைகேடாகச் சேர்த்ததோடல்லாமல், அரசுப் பணம், கட்சிப் பணம், சொந்தப் பணம் என்ற பாகுபாடின்றி வாரியிறைத்ததோடல்லாமல், அத்தனையையும் மூடி மறைக்க, பொய்களால் ஒரு மாளிகையே கட்டியிருக்கிறார்.

தாம் செய்த தவறுகள் வெட்டவெளிச்சமான பிறகும் ராஜினாமா செய்ய ஜெயலலிதா மறுப்பது ஒன்றும் ஆச்சரியமில்லை. ஹிட்லர், முசோலினி போல ஒரு பாஸிச ஆட்சி நடத்தி வரும் அவர், ஜனநாயக மரபுகளின் அடிப்படையில் நடந்து கொள்வார் என எதிர்பார்ப்பது முட்டாள்தனம்.

ஆனால், ஜெயலலிதா அரசை டிஸ்மிஸ் செய்ய பிரதமர் இன்னமும் தயங்குகிறார் என்பதுதான் வேதனைக்குரியது.

அவர் அந்த முடிவை எடுக்காததற்குப் பல காரணங்கள் இருக்கலாம்.

'சட்டரீதியான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு, ஜெயலலிதாவின் தில்லுமுல்லுகள் வெளிச்சத்துக்கு வரட்டும். அதன் பின்னர் நடக்கும் தேர்தலில் மக்களே அவரைப் பதவியிறக்கி விடுவார்கள்' என பிரதமர் நினைக்கலாம்...




ஜெயலலிதாவை டிஸ்மிஸ் செய்வதன் மூலம் தமிழகத்தில் சட்டம் - ஒழுங்குப் பிரச்னை முளைத்து சமூக விரோத சக்திகள் வெறியாட்டம் போடும் என்ற அச்சம் பிரதமரைக் கட்டிப் போடலாம்...

தமது நடவடிக்கையினால், வருகிற தேர்தலில் ஜெயலலிதா பக்கம் அனுதாப அலை வீசி விடுமோ என்று அவர் சந்தேகப்படலாம்...

ரஜினி அரசியலுக்கு வராவிட்டாலும் தமது கட்சிக்கு அவருடைய ஆதரவைப் பெற்று தேர்தலில் ஜெயலலிதாவைத் தோற்கடித்து விடலாம் என்ற நம்பிக்கை கூட பிரதமருக்கு இருக்கலாம்...

ஆனால், இந்த அரசியல்ரீதியான சிந்தனைகளையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, தார்மிக ரீதியில் பிரதமர் நடவடிக்கை எடுக்க வேண்டிய தருணம் இது.

தேர்தலின் போது மக்கள் தீர்ப்பு வழங்கட்டும் எனக் காத்திருந்தால் ஜெயலலிதாவின் சுரண்டல்களைத் தொடரவிட்டு, தமிழ்நாட்டையே ஒன்றுமில்லாமல் ஆக்குவதற்கு வாய்ப்பளித்ததாகி விடும். அந்தத் தேர்தலிலும் ஜெயலலிதாவின் பணபலம் விளையாடி அதைக் கேலிக்கூத்தாக்கி விடும். சசிகலா குடும்பம் மீதான சட்டபூர்வ நடவடிக்கைகளுக்கு ஓராயிரம் இடையூறுகள் விளைவிக்கப்படும்.

சட்டம் - ஒழுங்குப் பிரச்னையைச் சமாளிக்க, முன்னதாக ராணுவத்தைத் தமிழ்நாட்டுக்கு அனுப்பி விட்டு, ஜனாதிபதி ஆட்சியைப் பிரகடனம் செய்யலாம்.

அவ்வாறு செய்யாமல் போனால், பொய்களைப் போர்வையாக்கிக் கொண்ட ஓர் அரசைத் தொடர்ந்து நீடிக்க அனுமதித்த குற்றத்துக்கு ஆளாவார் பிரதமர். அதற்கும் ஓர் உள்நோக்கம் கற்பிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுப் போகும். உண்மை என்பதற்கே இந்த நாட்டில் அர்த்தமில்லை என்று ஆகிவிடும்!

குருவோ இளமையானவர். சிடரோ வயது முதிர்ந்தவர். அடர்த்தியான அந்தக் கருங்காட்டின் மத்தியில் அபூர்வ மூலிகைகளைத் தேடி அலைவது குருநாதரின் வழக்கம். அதிகம் நடக்கச் சக்தியற்ற சிடரோ முதுமையுடன் போராடியபடி குருவுக்கு உணவு சமைப்பது பழக்கம். குருநாதருக்கு வேறு எந்தப் பணிகளும் செய்ய முடியாவிடினும் உணவு சமைப்பது ஒன்றாவது

# சித்தம் கவர்ந்த சித்தர் மலை!

முடிகிறதே என்று சிடருக்கு மன நிறைவு.

அன்றும் அப்படித்தான். மூலிகைகள் தேடி, மலை மீது போகுமுன் அன்னம் தயாரிக்கும்படி ஆணை இட்டு குரு புறப்பட்டார். நெடு நேரம் கழித்து, பசி அதிகமாகி இருப்பிடம் திரும்பினார் குருநாதர். வயது முதிர்ந்த சிடரை வழக்கமான இடத்தில் காணவில்லை. பதறிப் போனார் குரு. காட்டு விலங்கு ஏதும் தாக்கி இருக்குமோ! முதுமை காரணமாகச் சுள்ளி எடுக்கக் காட்டுக்குள் போகும் போதே இறந்து போயிருப்பாரோ என்று கவலைப்பட்டார் குரு.

கொஞ்ச நேரத்தில் நல்ல அழகான வாலிபன் விறுவிறு என்று வந்து குருவை வணங்கினான். கவலை தோய்ந்த குரலுடன்.... "இங்கிருந்த வயது முதிர்ந்த பெரியவரைப் பார்த்தாயா? காலை இங்கேதான் இருந்தார். இப்போது காணவில்லை" என்றார் குருநாதர்.

வந்தவன் சிரித்தான். "சுவாமி... என்னை அடையாளம் தெரியவில்லையா?" என்றான். உற்றுப் பார்த்த குரு, "...நீ... நீ... அந்தக் கிழவரின் பேரனா? இருக்க முடியாதே.... அவர் இளமையில் எப்படி இருந்திருப்பாரோ அப்படியே இருக்கிறாயே!" என்று ஆச்சரியப்பட்டார். "இல்லை சுவாமி... அந்தக் கிழவரே நான்தான்" என்றான் வாலிபன். குரு அதிர்ச்சி அடைந்தார். "என்ன நடந்தது?" என்றார்.

"தங்களுக்கு உணவு தயாரிக்க, நெருப்பெரிக்க நிறைய மரக்குச்சிகள் எடுத்து வந்தேன். நெருப்பு உண்டாக்கி அடுப்பில் பாண்டத்தை வைத்து உணவு ஆக்கினேன். அடி பிடிக்கக் கூடாதே என்று பக்கத்தில் இருந்த குச்சியால் நன்கு கிளறி விட்டேன். அடிக்கொரு தடவை கையில் கிடைத்த குச்சியால் கிளறிக் கொண்டே இருந்தேன். திடீர் என்று உணவு கரு கரு என்று கறுத்துப் போனது. எனக்கு அச்சம் வந்துவிட்டது. இதில் ஏதோ தவறு நடந்துவிட்டது! விஷம் கிஷம் ஏதும் கலந்து விட்டதோ என்று அஞ்சி அதை எடுத்துத் தனியாக வைத்துவிட்டு, தங்கட்கு மீண்டும் தனியாக வேறு உணவு சமைத்தேன். எச்சரிக்கையாகக் கிளறி விட்டேன். நம் அன்னத்தை அதோ அங்கு தங்கட்காக வைத்திருக்கிறேன்" என்றான் சிடன்.

"அந்தக் கறுத்த உணவை என்ன செய்தாய்?" என்று பதறினார் குரு.

"உணவை வீணாக்கக் கூடாது என்ற எண்ணத்தாலும், விஷமாகவே இருந்தாலும் கொடிய முதுமையை விட மரணம் மேல் எனக் கருதி நானே உண்டேன்" என்றான் சிடன். "அடேய்... அந்தக் குச்சியில் தான் விஷயமே இருக்கிறது... உணவைக் கிளறியபோது நீ பயன்படுத்திய குச்சி அதிசய மூலிகையாக இருந்திருக்க வேண்டும். அதனாலேயே உணவு கறுத்தது! அந்த உணவைத்தான் உண்டு விட்டாய்! குச்சியையாவது கொடு. அதனை இந்த உணவில் இட்டு நானும் உண்டால் நானும் காயம் கல்பமாகும் சித்தி பெறுவேன். உன்னைப் போல் என்றும் இளமையாக இருப்பேன். குச்சி எங்கே? குச்சி எங்கே?" குரு பதறியபடி கேட்டார்.

"ஐயகோ... அதன் மேன்மை எனக்குத் தெரியாது அல்லவா! கிளறிய குச்சியையும் அடுப்பு எரியவில்லையே என்று அதிலே போட்டு எரித்து விட்டேன்" என்று விடை இறுத்தான் சிடன். குரு விடுவதாக இல்லை. உடனே ஒரு மூலிகை மூலம் சிடன் உண்ட உணவை வாய் வழி வெளிவர வைத்து அருவருப்பின்றி உண்டு தாமும் இளமை பூண்டு காயகல்பம் பண்ணிக் கொண்டார்.

இப்படி சுந்தரனாய் இளமை பூண்ட நிகழ்ச்சி நடந்த இடமே சேலத்துக்கு அருகிலுள்ள ஊரின் இளம் பிள்ளை என்ற ஊரின் பெயர்க் காரணம் என்கிறார்கள். குரு திருமூலர் என்றும், சிடர் காலாங்கி நாதர் என்றும் கூறப்படுகிறது! இவரது திருக்கோயிலே சித்தர் மலை என்னும் திருக்கோயில்.

கனிவனம் என்று மாங்கனிக்குப் பெயர் பெற்ற சேலம் கனிமவளம் மிக்க பூமி. இரும்புத் தாது மிகுந்த கஞ்சமலை அடிவாரத்தில்தான் இந்தச் சித்தர் கோயில் உள்ளது. சேலம் மாநகரின் மேற்கே 15 கி.மீ. தொலைவில் உள்ள

**சுகி. சிவம்**

இளம்பிள்ளை என்ற ஊருக்குப் போகும் சாலையில் சிறிது உள்ளடங்கி கோயில் அமைந்துள்ளது. மூலவர் பெயர் அருள்மிகு சித்தேஸ்வர சுவாமி. ஓர் இளம் யோகியாய் அருள் வழங்கும் விழியுடன், சின்முத்திரையுடன், வீராசனத்தில், மிகவும் கம்பீரமாக அமர்ந்திருக்கும் கோலத்துடன் மூலவர் காட்சி தருகிறார். உற்சவர் திருமேனியும் அப்படியே!

கோவில் அமைந்துள்ள சூழல் கொள்ளை அழகு. கஞ்சமலை கிழக்கு மேற்காக உள்ள அழகான வளமான மலைத் தொடர். பொன்னி ஆறு என்றழைக்கப்படும் சித்தர் சிற்றருவி வற்றாத நீரோட்டமாகக் கோயிலைச் சுற்றி ஓடுகிறது. நீரோட்டக் கரையில் சிறு சிறு கிணறுகளில் மக்கள் தீர்த்தம் எடுத்துக் குளிக்கலாம். தாது வளம் மிக்க தண்ணீர் என்று ஆய்வில் தெரிவிக்கப்பட்டது. திருக்கோவிலில் நான் சந்தித்த எழுபது வயது இளைஞர் மன்னாத கவுண்டனூர் எம்.கே. சுந்தரம் என்பவரது ஒரு வேளை ஆகாரமே இந்தத் தீர்த்தம்தான். இரும்பு, பொன், தாமிரச் சத்துமிக்க தீர்த்தம் என்பது அவரது அநுபவ அத்தாட்சி!

கலிங்கத்தில் இருந்து வந்தவர் காலாங்கி நாதர் என்று விளக்கம் சொல்லி அந்தக் காலாங்கி நாதர் தம் குருவான திருமூலர் உடன் தங்கி, இங்குப் பலவகை சித்தாடி கோயில் கொண்டுள்ளார் என்பதே இங்குள்ளோர் கருத்து. இதற்கு ஆதாரமாகத் திருக்கோவில் தகவல் பலகையில் திருமூலர் கூற்றாக,

"மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையானொடு
இந்த எழுவரும் என்வழி யாமே"

என்ற பாடல் திருமந்திரம் 132 என்று குறிக்கப்பட்டுள்ளது.

முதலில் கஞ்ச மலைச் சித்தர் பெருமை உணராமல் ஊரார் சிலர் அவரை அடித்ததாகவும், அதன் காரணமாக மழையின்றிப் போக, அவரை விரும்பி வழிபட்டு, பின்னர் அவர் வாக்கிட்ட வண்ணம் மழை பெய்ததாகவும் வரலாறு. இன்றும் சித்திரை மாதத்தில் சித்தர் திருவிழா சீரும் சிறப்புமாக நடக்கிறது. முதல் செவ்வாயில் பன்னிரண்டு பட்டிகளில் (கிராமங்களில்) திருவிழா வசூல் நடக்கிறது. இரண்டாம் செவ்வாயில் மலையின் மேலே பொங்கல் வைக்கும் விழா நடக்கிறது. மூன்றாம் செவ்வாயில் மலை அடிவாரத்தில் கோவிலை ஒட்டி பொங்கல் வைத்து சித்தேஸ்வர சுவாமியை வணங்குகின்றனர்.

சித்தர் அடிபட்டதைக் குறிக்கும் வகையில் சித்தரைப் போல விரதமிருந்து வேடமிட்ட ஒருவரை மாலையிட்டு அழைத்து வந்து, புதுத் துண்டு பிரம்பு கொண்டு மெதுவாக அடிக்கும் சடங்கும், பிறகு மழை என்று பெய்யும் என்று வேண்ட அவர் அருள்வாக்கிடும் விழாவும் மிகப்பிரபலமாக நடைபெறுகிறது. சோளம், கம்பு, அரிசி, என்று பலப்பல தானியங்களைக் கொண்டு தனித் தனியாகப் பொங்கல் இட்டு திருக்கோயில் முன்பு விரிக்கப்பட்டுள்ள பாவாடையில் அதைக் கொட்டுகிறார்கள். அது மலை போல் குவிகிறது.

பல தானியங்களால் செய்யப்பட்ட பொங்கல் குவியலில் இருந்து



வந்திருக்கும் பக்தர்கட்குப் பிரசாதம் வழங்கப் படுகிறது. யார் யாருக்கு எந்த எந்த தானியம் (கேப்பை, சோளம்) கையில் கிடைத்ததோ அதை அந்த ஆண்டு அவர்கள் வயலில் பயிரிட்டால் அமோக விளைச்சல் வரும் என்பது பக்தர்கள் நம்பிக்கை. அவரைக் கொட்டை, கேப்பை, வெல்லம் சேர்த்துச் செய்யும் பொங்கலே இங்கு விசேஷம். கோயிலைச் சுற்றி வரும் போது, சுவாமிக்குத் தீர்த்தம் எடுப்பதற்காகப் பெரிய கிணறு ஆற்றங்கரைப் பக்கம் இருப்பது தெரிகிறது. ஸ்காந்த தீர்த்தம் என்கிற இக்குளத்தில் உப்பு, வெல்லம், மிளகு இட்டு சித்தரை வணங்கினால், அவை தண்ணீரில் கரைவது போல துயரங்கள் கரைகிறது என்கின்றனர். மேலும் தோல் நோய், பால் உண்ணி நீங்கித் துயர் குறைந்தோர் பலர். தீர்த்தத்தை நாம் பார்த்த போது பதினைந்து அடி உயரம் உள்ள கைப்பிடிச் சுவரில் இருந்து குரங்குகள்பல குதித்து நெடுநேரம் கழித்து வெளியே வருவதைக் கண்டு மகிழ முடிந்தது! குரங்குகட்கும் நோய் இருக்காதா?

அமாவாசை அன்று பெருங்கூட்டம் வருவதால் அமாவாசைக் கோயில் என்றே அழைக்கின்றனர். அமாவாசை பௌர்ணமி காலங்களில் மலைமேல் சென்று தியானம், தவம், வழிபாட்டில் பலர் ஈடுபட்டு அங்கேயே தங்கி வருகின்றனர். இரும்புச் சத்து மிக்க மண் (சேலம் இரும்பாலை தோன்றக் காரணமே இதுதான்) என்பதால் மூலிகைகள் மரங்கள், அருமையாக உள்ளன. கருநெல்லி, கருவாழை, கருநொச்சி, கருந்துளசி, கரும்பிரண்டை மிக்கிருப்பதால் கருங்காடு என்றே பெயர் பெற்றது இப் பகுதி.

நரைதிரை நீக்கி இளமை நல்கும் கருநெல்லி ஆயுதப் புண்களை அகற்றும் சல்லிய கரணி, துண்டான உறுப்புகளை இணைக்கும் சந்தான கரணி, அங்கத்தில் உள்ள ஆயுதத் துகளை வெளியேற்றிப் புண்ணாற்றும் சாவல்ய கரணி, இறந்தாரையும் எழுப்பும் சஞ்சீவி கரணி இங்குண்டு என்பது மூலிகை தேடுவோரின் அறிவிப்பு. இத்தலம் பற்றிய பழைய பாடலைச் சந்நிதியில் ஒரு பெரியவர் பாட அதனை இதோ தருகிறேன்.

'அவனிதனில் அட்டாங்கம் அணிமாதி சித்தியால்
அங்கங்கு விளையாடியே
அருமைக்கரு மூலில் சூழும் அழகான கஞ்சமலை
அதில் வாசமாக எண்ணி
கவின் மிக்க கருநெல்லி கருவாழை கருநொச்சி
கருங்காடு வாசமாகி
காசினியில் ஏற்றமிகு கஞ்சமலை மேற்கதாய்
கருணையுடன் வில்வ மருகில்
பவவினைகள் அழிவுற பலர்கண்டு தொழுதெழ
பட்சம் வைத்தாள் வதற்குப்
பாலருடன் கூடிகுழல் ஊதிவிளையாடியடி
பட்டிங்கு அமர்ந்த தேவா
தவமுனிவர் பாமரர்கள் அமாவாசைக் கூட்டமாய்
தான் தொழுகும் காந்தல் நதிவாழ்
சத்து சித்தான பரமானந்த தெய்வமே
சித்தீஸ்வரக் கடவுளே!

படித்தவர் பாமரர் என்கிற பேதம் எல்லாம், சித்தர் முன்பு கிடையாது. எப்படி வாழ்வது என்பது தெரியாத வரை எல்லோரும் மதியற்றோரே! அமாவாசை மதியற்ற நாள் (மதி - நிலவு) மதியற்ற நிலையில் இருக்கிறோம் என்பதை உணர்த்தும் வகையில் அமாவாசையில் மதியற்ற நாளில் துதிப்பது சித்தருக்கு உகந்த விஷயம் போலும். இது கருதியே, தவமுனிவரையும் பாமரரையும் சமமாக்கி, 'அமாவாசைக் கூட்டமதில்' என்று எழுதினாரோ அந்தத் தெய்வக் கவிஞர்!

(தொடரும்)

---

# அமரர் கல்கி நினைவு அறக்கட்டளை



படிப்பில் சிறந்த ஆனால் பொருளாதாரத்தில் பின் தங்கிய மாணவர்களுக்கு நடப்பு கல்வி ஆண்டுக்கு உதவித் தொகையாக ரூ.55,000 விநியோகிப்பது என்று தீர்மானித்து, அவ்வாறே கல்கி ஜூன் இறுதி வார இதழில் அறிவிக்கப்பட்டது. ஆனால் வந்து குவிந்த விண்ணப்பங்களைப் பரிசீலித்த போது உத்தேசித்ததைவிட, அதிகமான மாணவர்கள் உதவித் தொகை பெற தகுதி உடையவர்களாக இருந்தனர். எனவே அறங்காவலர்கள் மொத்த உதவித் தொகையை ரூ.55,000லிருந்து ரூ.65,250 ஆக உயர்த்தி, மேலும் பல மாணவர்கள் பயனடைய வழி வகுத்தனர். உதவித் தொகைகள் அனைத்தும் விநியோகிக்கப்பட்டு விட்டன.

உதவித் தொகை பெற்ற மாணவர்களுக்கு வாழ்த்துக்கள். அறக்கட்டளைக்கு நன்கொடைகள் அனுப்பிய அனைவருக்கும் நன்றி.

கி.ராஜேந்திரன்
(நிர்வாக அறங்காவலர்)

பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

## பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



## குபேரன் வைப்பு திட்டம்

வட்டி 21% குறைந்த அளவு டிபாசிட் ரூ. 50,000/- காலம் : 5 வருடம்.
மாத வட்டிக்கான செக்குகள் முன்னதாகவே வழங்கப்படும்

## அமுத சுரபி டிபாசிட் திட்டம்



| டிபாசிட் தொகை | காலம் | கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 5,600 | 15 வருடம் | ரூ. 1,00,000 |
| ரூ. 7,000 | | ரூ. 1,25,000 |

## கல்பதரு மணிபேக் திட்டம்



அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்.
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !

## முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

## சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்



**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்



# விஜயதசமி - வெற்றிக்கு வழிவகுக்கும் பொன்னான நன்னாள்

# மேக்ஸ்வெல்த்
# இதோ உங்களை அழைக்கிறது
# ஆதாயங்களுடன்
# ஒரு அமோக நட்பு கொள்வதற்கு !

உயர்தகுதி செக்யூரிடிகளில் - 36 மாதங்களுக்கு ரூ. 10,000/-
அல்லது அதன் மடங்குகளில் பணம் டிபாசிட் செய்திடுவீர்;
பெற்றிடுவீர் இத்தனை ஆதாயங்களை:

(1) ஒவ்வொரு ஆண்டும் வட்டியின் மூலம் ரூ. 2400/-
(2) ரொக்கத் தொகைக்கு, மிகச்சிறந்த கம்பெனியிலிருந்து 200 பங்குகள்
(3) 3% ரொக்க ஊக்கத் தொகை
(4) இலவசமாக ரூ. 300/- விலை மதிப்புள்ள ஒரு வெள்ளிக் குத்து விளக்கு

முதல் 12 மாதங்களிலேயே இப்படி மொத்தம் கிடைப்பது ரூ. 5000/-
இவ்வகையில் உங்கள் ஆதாயமோ 50%

### உங்களை பிரமிக்க வைக்கும்
### வேறு என்ன செய்தி உண்டு ?

உங்களுக்குச் சொந்தமாகும் மேற்படி பங்குகளை நீங்கள் பங்கு சந்தையில் நிச்சயம் உச்ச உயர் நிலை விலைக்கு விற்று உள்ளம் பூரித்திடலாம் பங்குகளை விற்க விரும்பாமல் வைத்திருக்க விரும்பினாலும்; ஆண்டுதோறும் அமோக டிவிடெண்டுகள் பெற்றிடலாம்.

ஒரு வருடத்திற்குப் பிறகு உங்கள் பங்குகளை நீங்கள் விரும்பினால் எங்களுக்கு விற்கும் பங்குக்கு எங்களிடமிருந்து தோராயமாக ஒரு பங்கிற்கு ரூ. 20/- பெற்றுக்கொள்ளலாம்.

ஆர்வமான இந்தத் திட்டம் 250 உறுப்பினர்கள் சேர்க்கப்படும் வரையில் அல்லது ஒரு வாரம் வரையில் - இவற்றில் எது முன்னதாக முடிகிறதோ அது வரை - மட்டுமே அமலில் இருக்கும்.

இலவசம்!



முந்திடுவீர் இப்பொழுதே முனைந்திடுவீர் உங்கள் பணத்தை அதிவேக ஆதாயம் ஈட்டிக் கொடுக்கும் அன்புப் பொக்கிஷத்தில் செலுத்திடுவீர்.

## மேக்ஸ்வெல்த்
## இன்வெஸ்ட்மெண்ட்ஸ் & ஃபைனான்ஸ்,

6, ஜெயம்மாள் சாலை, II ஆம் மாடி, (வானவில் அருகில்) தேனாம்பேட்டை,
சென்னை - 600 018. தொலைபேசி எண்: 456 018.

ADWAVE/MF/5155 A

# பால் குடிக்காத பிள்ளையார்!

**அகிலா கார்த்திகேயன்**



அடையாறு ஹோட்டலில் நான் காப்பியும், என் நண்பன் விநாயகம் பாலும் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, பக்கத்து டேபிளில் ஒரு காலேஜ் பையன் "டேய்... பிள்ளையார் பால் குடிக்கறார்டா" என்றவுடன் தன் கனமான உடம்பை அசைத்து எழுந்து, "என்னடா கிண்டலா பண்றே" என்று விநாயகம் அந்தப் பையனை அடிக்கவே போய் விட்டான்.

"கிண்டலில்லை. உண்மையாக..." என்று பையன் சொன்னதை நாங்கள் நம்பத் தயாராயில்லை... விடலைக் குறும்பு என்று தான் நினைத்தோம். வெளியே வந்து விநாயகத்தை பஸ் ஏற்றி விட்டு வழக்கம் போல, வளர்ப்பு மகன் ஜான்வாஸ ஊர்வலம் புகழ் அடையாறு சிக்னல் விநாயகரை தரிசனம் செய்யப் போன போது, அங்கு வழக்கத்துக்கு மாறாக பக்தகோடிகளுடன் 'பட்டு மாமி'களும் சூழ்ந்து சன்னதியை மறைத்துக் கொண்டிருந்தனர்.

"சாயங்காலம் நாலு மணிக்கு கௌரி மாமி கொடுத்தாளாம், அரை லிட்டர் பாலும் கிண்ணத்திலே காணாம போச்சாம்!" ஒரு மாமி கையில் பாலும் ஸ்பூனுமாக தன் பையனிடம் சொல்லிக் கொண்டே ஓடிய போதுதான் அந்த நிகழ்வின் வீர்யம் எனக்குப் புலப்பட்டது.

"ரியலி இட் ஈஸ் ய ஃபேக்ட்... நானே பார்த்தேன், ஸ்பூனிலே இருக்கிற பால் வானிஷ் ஆயிடறது" என்று யாரோ ஊர்ஜிதப் படுத்தி விட்டுப் போக, எனக்கு கிலி கண்டு விட்டது. என்ன கலி முற்றி விட்டதா! இது என்ன ஆச்சர்யம்!

ஆனால் நான் பார்க்க விரும்பவில்லை... கூட்டம் பார்க்கவும் விடவில்லை... ஏதோ கல்லாய் உட்கார்ந்திருப்பவரிடம் போய் நின்று தைரியமாக இதைக் கொடு அதைக் கொடு என்று வரம் கேட்பதில் உள்ள சுதந்திரம், அவர் பால் குடிப்பதைப் பார்க்கும் போது கட்டாயம் பறிபோய்விடும்... ஆகவே பார்ப்பதைத் தவிர்த்து வீட்டுக்குச் செல்ல விழைந்தேன். அப்பொழுதுதான் தெரிந்தது – அடையாறு கோயிலில் மட்டுமல்ல – உலகெங்கும் அத்தனை கோயில்களிலும் உள்ள அனந்த கோடி பிள்ளையார்கள் மட்டுமின்றி பிளாட்பார பிள்ளையார்கள் காம்பவுண்ட் சுவர் பிள்ளையார்கள் முதலிய எல்லாமே பால் குடிக்கின்றன என்பது.

எனக்கு பீதி கண்டு விட்டது. நடக்கக் கூடாதது நடந்து கொண்டிருக்கிறது. சொல்வதற்கில்லை, வீடு போய் சேர்வதற்குள் பிரளயமே வரலாம்...

ஆண்டவா வீட்டிற்குப் போய் மனைவி மக்களைப் பார்க்கும் வரையிலாவது பொறுத்திரு...

வீட்டிற்குப் போன போது பூட்டியிருந்தது. பக்கத்து பிளாட் மாமி சாவியைக் கொண்டு

வந்து கொடுத்தாள். "சாந்தாவும் குழந்தைகளும் கோயிலுக்குப் போயிருக்கா... பிள்ளையாருக்குப் பால் கொடுக்க..." என்றாள்.

வீட்டிற்குள் நுழைந்து கை கால்களை அலம்பிக் கொண்டு பூஜை அறைக்குள் போனேன். திருநீறை எடுத்து அப்பிக் கொண்டு விழுந்து வணங்க எண்ணினேன். எதிரே இருந்த பிள்ளையார் படம் என்னையே பார்ப்பது போல ஒரு பிரமை... வணங்கி எழுந்திருக்கும் போது சடாலென்று தும்பிக்கையை நீட்டித் தலையில் ஒரு குட்டுக் குட்டி "அயோக்ய ராஸ்கல் இன்னியோட உலகம் காலி" என்று சொல்லி விடுவாரோ என்று ஒரு பக்... பக்... பீதியில் 'குப்'பென்று வியர்த்து விட்டது. தனியாக பூஜையறையில் நிற்கவே பயந்து ஹாலில் வந்து பேனை போட்டு விட்டு வியர்வை அடங்க அமர்ந்தேன்.

எனக்கு மட்டும்தான் இப்படி... சாந்தாவும் என் குழந்தைகளும் பிள்ளையாருக்கு அன்பாகத்தான் பால் கொடுத்து விட்டு வந்திருந்தனர்.

"அப்பா நான் கொடுக்கும் போது வேகமா உறிஞ்சிண்டார். ராம்ஜி கொடுத்தா... சரியாகவே குடிக்கலே..." என் மகள் இப்படி ஒரு ஆனந்தப்பட்டாள்.

"கலியிலே, தான் இருக்கேன்னு காட்றார்" என்றாள் சாந்தா. விபரீதம் ஏதோ நடக்கத்தான் போகிறது...

மேல் மாடி சுந்தரத்திடம் இதைச் சொன்ன போது, "அப்படியெல்லாம் ஏன் ஸார் நினைக்கறீங்க? இப்போ ஜனங்களெல்லாம் ரொம்ப பக்தியா இருக்கிறதாலே பகவான் கருணை காட்டறதா இருக்கலாமே" என்றார்.

ஆனால் எனக்கு ஏதாவது நடந்து வைக்கக் கூடாதே என்று டென்ஷனாக இருந்தது. டீ.வி.யில் 'சர்பேஸ் டென்ஷன்'தான் காரணம் என்ற போதும் எனக்கு டென்ஷன் குறையவேயில்லை.

பக்கத்து பிளாட் பிரேம்நாத் வேறு ஒரு கையில் பாலும் மறுகையில் ஒரு சின்ன பிள்ளையார் விக்ரகமுமாக என் வீட்டிற்கே வந்து நான் 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லச் சொல்லக் கேட்காமல் 'வாக்குவம் க்ளீனர்' விற்பனையாளர் போல் விடாப் பிடியாக டெமான்ஸ்ட்ரேஷன் செய்தே காண்பித்து விட்டான்... ஸ்பூன் பாலை பிள்ளையார் இழுத்துக் கொண்டதை மிரள மிரளப் பார்த்தேன். பயம் மிரட்டியது. இன்று இரவிற்குள் பிரளயம் வந்து விடுமோ... எப்படி மற்றவர்கள் இதைச் சாதாரணமாக எடுத்துக் கொள்கிறார்கள்?

சாந்தா அப்பாவித்தனமாகக் கேட்டாள்: "ஏன்னா டீ.வி.யிலே பால் கன்னாபின்னான்னு வித்ததுன்னு சொல்றானே... நாளைக்கு 'ஆவின்' கிடைக்குமோ?"

"பிழைச்சுக் கிடந்தா பார்க்கலாம்" என்று நிஜமான அர்த்தம் உணர்ந்து பதில் கூறினேன்.

**வி**டிந்தது. நல்லவேளையாக வழக்கம் போல் ஆவின் வந்திருந்தது. டிகாக்ஷன் வாசனை அடித்தது. காப்பி கலந்து கொண்டு வந்த சாந்தா, "நவராத்திரி லீவுன்னு உங்க அப்பா ஊர்லேர்ந்து வந்து நிக்கப் போறாரு... அவரை வைச்சுண்டு என்னால் அழ முடியாது" என்றாள். அவள் மாறவில்லை!

ஜன்னல் வழியாகக் கீழே பார்த்தேன். பக்கத்து பிளாட் பிரேம்நாத் ஒரு காண்டிராக்டரின் காரை வரழைத்து உரிமையோடு ஏறி போய்க் கொண்டிருந்தான். அவன் பொதுப் பணித்துறையில் வேலை செய்பவன். அவன் மாறியதாகத் தெரியவில்லை.

காய்கறி வண்டிக்காரன் தெருவில் வந்தான்... என்றும் போல் அவன் தராசு இல்லுமுல்லு செய்தது.

பஸ்ஸில் ஆபீஸ் போகும் போது யாருடைய பர்ஸோ பிக்பாக்கெட் அடிக்கப் பட்டிருந்தது.

தெருவோர பிளாட்பாரக் கடைகளில் காக்கிச் சட்டைக்காரர் மாமூலாக வசூல் செய்து கொண்டிருந்தார்.

ஆபீஸில் சகல ஊழியர்களும் பிள்ளையார் பற்றி அரட்டை அடித்தே வேலைகளை கவனிக்காமல் ஃபைல்களை குவித்தனர்.

"இந்தக் கிழம் என்னைப் பார்த்து ஜொள்ளு விடுது" என்று லேடி டைப்பிஸ்ட் வழக்கமாக அலுத்துக் கொண்டாள்.

"பிளான் அப்ரூவ் ஆகணும்னா மந்திரிக்கு ரெண்டு லட்சமாம்..." சக அதிகாரி நொந்து கொண்டார். மாலை பேப்பரில் வழக்கம் போல் கற்பழிப்பு, நகை பறிப்பு, கடத்தல் இத்யாதி...

வாழ்க பிள்ளையார்! வதந்தியோடு நிறுத்திக் கொண்டார். அவர் மட்டும் நிஜமாகவே பால் சாப்பிட்டிருந்தால்?... 'இன்று பால் குடிக்கிறவர் நாளைக்கு தும்பிக்கையால் ஆளைச் சுழற்றி அடித்தால் என்ன பண்ணுவது?' என்று பயந்து எல்லாரும் திருந்தியிருக்க மாட்டார்களா? அப்புறம் வாழ்க்கையே சுவையின்றி 'சப்'பென்று போய் விடுமே!

நல்லவேளை, அப்படியெல்லாம் நடக்காமல், அவரவரும் தப்புப் பண்ணி விட்டு, ஒருவரை ஒருவர் குற்றம்சாட்டி, காரசாரமாக விவாதித்து, பேப்பரில் நியூஸ் போட்டு, வாழ்க்கையை ரசனையோடு ஓட்டலாம். அப்பாடா! எவ்வளவு நிம்மதி!

# பரபரப்பின் இன்னொரு பெயர் பில்லு மோதி!

**சி.வி. நரசிம்மன்**

உள்துறை அமைச்சர் பிரும்மானந்த ரெட்டி, ஒரு தரம் என்னிடம் இப்படிச் சொன்னார் :

"நரசிம்மன், பார்லிமென்ட்டில் எம்.பிக்களை எதிர் கொள்வது எத்தனை சிக்கலான காரியம் தெரியுமா? இதுவே மாநில சட்டசபைக் கூட்டம் என்றால் பிரச்னையே இல்லை. இருக்கிற நூறு, நூற்றைம்பது எம்.எல். ஏக்களும் அநேகமாகத் தெரிந்தவர்களாகவே இருப்பார்கள். ஏதாவது பிரச்னை கிளம்பினால், எழுந்து சற்று உரக்கப் பேசினால் உட்கார்ந்து விடுவார்கள். விளக்கிச் சொன்னால் புரிந்து கொண்டு விடுவார்கள். ஆனால் இங்கே யாரை, எந்த மொழியில் அதட்டுவது? தவிர, அதட்டினால்தான் அடங்கி விடுவார்களா? ஒவ்வொருத்தரும் நாட்டின் ஒவ்வொரு மூலையிலிருந்து வருகிறார்கள். எத்தனை தரம் பார்த்தாலும் புதுப்புது முகங்களாகத்தான் தெரிகின்றன. இவர்கள் ஒருபுறம் என்றால் வெளிநாட்டுப் பார்வையாளர்கள் வேறு நிரம்பி வழிகிறார்கள். எந்த அசம்பாவிதமும் நடந்து விடக் கூடாதே என்று எப்போதும் டென்ஷனுடனே இருக்க வேண்டியிருக்கிறது. ஸ்டேட் பாலிடிக்ஸ் தான் வம்பில்லாத விஷயம்!"

மேலோட்டமாகப் பார்த்தால், அமைச்சர் தமாஷாகப் பேசியிருப்பது போல் தோன்றலாம். உண்மையில் பிரும்மானந்த ரெட்டி தமாஷாகப் பேசக்கூடியவரே அல்ல! ரொம்ப சீரியஸான மனிதர். எப்போதும் ஏதாவது சிந்தனையிலேயே இருப்பார். பேசவேண்டி இருந்தாலும் ரத்தினச் சுருக்கம்தான்! அவரது இந்தக் கருத்தும் சீரியஸான விஷயம்தான்.

யோசித்துப் பாருங்கள். நாடு முழுவதிலுமிருந்து எம்.பிக்கள், பிரச்னைகளை மூட்டை கட்டிக் கொண்டு வந்து, பார்லிமென்ட் உள்ளே நுழைந்ததும் கவிழ்த்துக் கொட்டுகிறார்கள். எல்லோருக்கும் அவசரம்; பரபரப்பு; காத்திருத்தல்களால் நேரும் சலிப்பு. அப்புறம் கூச்சல் - குழப்பத்துக்குக் குறைவு என்ன?

இத்தனைக்கு இடையிலும் சில சுவாரஸ்யமான மனிதர்களை அங்கே நான் சந்தித்திருக்கிறேன். அடிப்படையில் மிக அழுத்தமான, சீரியஸான நபர்கள் தானெனினும் தமது தனித்துவம் மிக்க நடவடிக்கைகளால் பார்லிமென்ட்டுக்கே கலகலப்பூட்டுபவர்கள்.

சபையில் விவாதம் நடந்து கொண்டிருக்கும் போது அநாவசியமாக யாரும் பேசக் கூடாது. ஆனால் தகவல் பரிமாற்றம் நடந்தாக வேண்டுமே! அதற்கு என்ன வழி?

சிறிய சீட்டுகளில் விஷயத்தை எழுதி From - இன்னார்; To - இன்னார் என்று குறிப்பிட்டு, தயாராகக் காத்திருக்கும் பியூன்கள் மூலம் கொடுத்தனுப்புவார்கள். அந்தச் சீட்டுகள், செல்லும் வழியில் பல கைமாறிப் போவதும் உண்டு.

அப்படி ஒருதரம் கைமாறி வந்த சீட்டைப் பார்த்தவர்கள் ஒன்றும் புரியாமல் விழித்தார்கள். ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

விஷயம் இதுதான். அதில் From P.M. to I.G. என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

பிரைம் மினிஸ்டர் - ஐ.ஜிக்கு சீட்டு அனுப்பியிருக்கிறார்! எந்த ஐ.ஜி.? டெல்லி ஐ.ஜியா? அவர், சபைக்கு வந்திருப்பதாகத் தெரியவில்லையே! பியூனிடம் விசாரித்தார்கள். விஷயம் தெரிந்ததும் சிரிப்பு பிய்த்துக் கொண்டு பறந்தது!

சுதந்திரா கட்சி எம்.பி. ஆன பில்லு மோதி, தாம் பிரதமருக்கு அனுப்பிய சீட்டில் From பில்லு மோதி; To இந்திரா காந்தி என்பதை குறும்பாக From PM to IG என்று குறிப்பிட்டிருந்தார்!

பில்லு மோதி படு சுவாரஸ்யமான மனிதர்! எப்பொழுதும் ஏதாவது தமாஷ் பண்ணிக் கொண்டே இருக்காவிட்டால் அவருக்குப் பொழுது போகாது. அவருடைய துணிச்சலுக்கும் தைரியத்துக்கும் ஈடு இணை கிடையாது.

அப்போதெல்லாம் அரசுக்கு ஏதாவது தர்மசங்கடமான சம்பவங்கள் ஏதும் நடந்து விட்டால் உடனே "இது யாரோ C.I.A. ஏஜென்ட் செய்த வேலை" என்று குற்றம் சாட்டுவது அதிகமாக இருந்தது. யாரைக் குற்றம்

சாட்டுவதென்றாலும் உடனே "அவர் ஒரு சி.ஐ.ஏ. ஏஜெண்ட்" என்ற குற்றச்சாட்டுதான் முதலில் கிளம்பும். இது பரவலாக நடந்து வந்த விஷயம்.

பார்த்தார் பில்லு மோதி. ஒரு நாள், பார்லிமெண்ட்டுக்கு வரும் போது நீளமாக ஒரு 'ஏப்ரன்' அணிந்து கொண்டு வந்தார். அந்தக் கோலத்தில் அவரைப் பார்த்தவர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள்.

காரணம் அதில் முன்னும்



பின்னும் "நான் ஒரு சி.ஐ.ஏ. ஏஜெண்ட்" என்று கொட்டை எழுத்தில் எழுதப்பட்டிருந்தது!

சபையே கலகலத்து விட்டது. சலசலப்பு எழ, என்ன செய்வது என்று புரியாமல் ஒரு கணம் விழித்த சபாநாயகர், பின் பில்லு மோதியைக் கூப்பிட்டு, ''தயவு செய்து இதைக் கழற்றிவிடுங்கள்!'' என்று வேண்டிக் கொண்ட பிறகுதான் அதை அகற்றினார் பில்லு!

பரபரப்பு ஏற்படுத்துவதில் அவருக்கு இணை அவர்தான்!

இன்னொரு நபர். இவரும் மிக சுவாரஸ்யமான மனிதர். ஜனதா அரசில் காபினெட் செயலாளராக இருந்த என்.கே. முகர்ஜி. எமர்ஜென்ஸிக்கு முன்பு இந்திரா அரசில் இவர் உள்துறை செயலாளராக இருந்தார். அப்பொழுதுதான் நான் உள்துறை இணைச் செயலாளராகப் பணியில் சேர்ந்து அவருடன் நெருங்கிப் பழகினேன்.

ஜனதா அரசில் ஒருதரம் ஏதோ ஒரு முக்கியமான விஷயம் குறித்த காபினெட் மீட்டிங் நடந்து கொண்டிருந்தது.

பிரதமர் மொரார்ஜி, உள்துறை அமைச்சர் சரண்சிங், மற்ற அமைச்சர்கள், காபினெட் செயலாளர் யாவரும் கூடித் தீவிரமாக விவாதித்துக் கொண்டிருந்த சமயம், ஒரு பியூன் அவசரமாக உள்ளே வந்து, முகர்ஜியிடம் ஒரு சீட்டு வைத்துப் போனான். அதைப் பார்த்த முகர்ஜியின் முகத்தில் லேசாகக் கலவரம் படர்ந்ததை மற்றவர்கள் கவனித்தார்கள். ஆனால் ஏதும் கேட்கவில்லை.

கால் மணி நேரம் சென்றிருக்கும். பியூன், மறுபடி உள்ளே வந்து ஒரு சீட்டு வைத்துப் போனான். அவசரமாக அதை எடுத்துப் படித்த முகர்ஜியின் முகத்தில் கலவரம் அதிகமானது!

**'நான் ஒரு சி.ஐ.ஏ. ஏஜெண்ட்' என்று எழுதப்பட்ட 'ஏப்ரன்' ஒன்றை பில்லு மோதி பார்லிமெண்டுக்கு அணிந்து கொண்டு வந்ததைப் பார்த்த அனைவரும் அதிர்ச்சியடைந்தார்கள்....**

காபினெட் செகரட்ரி முகர்ஜி ஏன் இப்படி 'uneasy' ஆக இருக்கிறார்?

கவனித்து விட்ட சரண்சிங் முகத்தில் கேள்விக்குறி. ஆனால் எதுவும் பேசிக் கொள்ள வில்லை.

அரை மணி ஆகி இருக்கும். மறுபடியும் பியூன். மறுபடியும் சீட்டு, மறுபடியும் கலவரம். இந்தமுறை சற்று தீவிரமாகவே அவர் பாதிக்கப்பட்டு விட்டது போலத் தெரியவே, சரண்சிங் கலவரமானார்.

என்ன ஆயிற்று? ஏதாவது அசம்பாவிதமா?

அவர், முகர்ஜியிடம் "என்ன விஷயம்?" என்று கேட்க, அவர் பேசாமல், அந்தச் சீட்டை சரண்சிங்கிடம் நகர்த்தினார்.

இந்த மௌன நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த மொரார்ஜி, சீட்டை வாங்கிப் பார்த்துக் கொண்டிருந்த சரண்சிங்கிடம் "என்ன?" என்று சைகையில் கேட்டார்.

சரண்சிங் பேசவில்லை. சீட்டை மொரார்ஜியிடமே கொடுத்து விட்டார்! மொரார்ஜியும் வாங்கிப் பார்த்து விட்டு, திருப்பி முகர்ஜியிடமே கொடுக்க, சபை ஒன்றும் புரியாமல் விழித்தது. விஷயம் தெரியாவிட்டால் மண்டை வெடித்து விடும் போல ஒரு இறுக்கம் யாவருக்கும் சூழ -

அது தெரியவந்த போது வெடித்த சிரிப்பு இருக்கிறதே...

வேறு ஒன்றுமில்லை. பம்பாயில் இந்தியா - வெஸ்ட் இண்டீஸ் அணிகளுக்கு இடையே கிரிக்கெட் போட்டி நடந்து கொண்டிருந்த சமயம் அது. காபினெட் மீட்டிங்கில் இருந்தாலும் கால் மணிக்கு ஒரு தரம் ஸ்கோர் கேட்டாக வேண்டும் முகர்ஜிக்கு.



**ஆசிரியர் :** யாருக்காவது ஏதாவது சந்தேகம் இருந்தால் கேட்கலாம்...

**மாணவன் :** பிரபுதேவா வுக்குக் கல்யாணம் ஆயிடிச்சா இல்லையா சார்?

— சீர்காழி வி. ரேவதி



இந்திய அணி ஃபீல்டிங்கில் கோட்டை விட்டுக் கொண்டிருந்ததோ, விக்கெட் நிறைய விழுந்து கொண்டிருந்ததோ அல்லது மேற்கிந்தியத் தீவினர் விளாசிக் கொண்டிருந்தார்களோ - ஏதோ ஒன்று.

காபினெட் செயலாளரை அந்த மேட்ச் அப்படி ஒரு பாடு படுத்திவிட்டது அப்போது!

உலகில் மற்றெல்லாவற்றையும் விட முகர்ஜி மிகவும் விரும்பும் ஒன்று கிரிக்கெட்! கிரிக்கெட்டில் அப்படி ஒரு மோகம் அவருக்கு.

முகர்ஜியைப் பற்றிச் சொல்லும் போது இன்னொரு விஷயம் ஞாபகம் வருகிறது. சாதாரணமாகப் பேசிக் கொண்டிருக்கும் போதும் 'கிரிக்கெட்' கலக்காமல் அவரால் பேச முடியாது.

அப்போது நான் சி.பி.ஐ. இயக்குநராகப் பணியாற்றிக் கொண்டிருந்த நேரம்.

மத்திய அரசில் செயலாளர் அந்தஸ்தில் பணியாற்றிக் கொண்டிருந்த ஒரு சீனியர் ஆபீசர் மேல் ஏகப்பட்ட புகார்கள் வந்து கொண்டிருந்தன. ஊழல் புகார்கள்.

அவற்றை சி.பி.ஐ. விசாரித்தாக வேண்டிய அவசியத்தை உணர்ந்து, நான் முகர்ஜியிடம் சென்று விஷயத்தைச் சொன்னேன்.

வெளியே யாருக்கும் தெரியாமல், அவரது Reputation க்குப் பங்கம் வராமல் ஒரு Preliminary enquiry செய்ய விரும்புவதாகத் தெரிவித்தேன்.

முகர்ஜியும், "சரி, செய்யுங்கள்" என்று அனுமதித்தார்.

கிட்டத்தட்ட ஒரு மாதம் என் ரகசியப் புலனாய்வு நடந்தது. பல சந்தேகங்கள் எழுந்தன. அந்த அதிகாரியின் மேல் முறையான விசாரணை நடத்த வேண்டிய அவசியம் இருப்பதை உணர்ந்தேன்.

நேரே முகர்ஜியிடம் சென்று, எனக்குக் கிடைத்த ஆதாரங்களைக் காட்டி, விசாரணைக்கான அவசியத்தைத் தெளிவு படுத்தினேன்.

முகர்ஜி மிகவும் மென்மையான மனிதர். கடுமையாக நடந்து கொள்வது அவருடைய இயல்புக்கு மாறானது.

நான் கொடுத்த ஆதாரங்களை முழுவதும் படித்துப் பார்த்தார். சற்று நேரம் யோசித்தார். ஃபைலை மூடி, என்னிடம் கொடுத்து விட்டு,

"ஸோ, இந்த விசாரணையில் உங்களுக்கு முதல் இன்னிங்ஸில் 'லீட்' கிடைத்து விட்டது!" என்றார் கிரிக்கெட் பாஷையில், சிரித்துக் கொண்டே.

நான் விடவில்லை.

"சார்! அம்பயர் மட்டும் நேர்மையாக நடந்து கொண்டால், இந்த மாட்சில் வெற்றியும் எனக்குத்தான்!" என்றேன் உடனே.

நான் அம்பயர் என்று குறிப்பிட்டது அரசைத்தான்! விசாரணையில் நான் என்ன சாதித்தாலும் நடவடிக்கை எடுக்கிற விஷயத்தில் அரசின் ஒப்புதல் இன்றி என்ன செய்து விட முடியும்? அவரும் சளைத்தவராக இல்லை.

"நரசிம்மன், நீங்கள் நம்பலாம். இந்த அம்பயர் ஒரு போதும் தவறான தீர்ப்புத் தரமாட்டார்!"

எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. முகர்ஜிக்கு நன்றி சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

அந்த கேஸை, துப்புரவாக அலசி, சம்பந்தப்பட்ட அதிகாரியின் மீது சுமத்தப்பட்ட ஊழல், புகார் உண்மை தான் என்று நான் நிரூபித்து, முகர்ஜியின் பாராட்டைப் பெற்றது தனிக் கதை.

வேறு ஒரு காலகட்டத்தில் இதே முகர்ஜி என்னைப் பார்த்து, "நரசிம்மன், நீங்கள் உங்கள் பணியில் வெண்கல மெடல் வாங்கியாகி விட்டது. வெள்ளி மெடலும் வாங்கியாகி விட்டது; பாராட்டுகிறேன். ஆனால் எப்போது தங்க மெடல் வாங்கப் போகிறீர்கள்?" என்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்தார்.

அப்போது மிக முக்கியமானதும் ரகசியமானதுமான ஒரு பெரிய பணியில் ஈடுபட்டிருந்தேன். அதைக் குறிப்பிட்டுத்தான் ஒலிம்பிக் பாஷையில் முகர்ஜி அவ்வாறு கேட்டார்.

என் பணிக்காலத்தில் சந்தித்த சவால்களில் ஒன்றாக இருந்த அந்த விஷயம் —

(அடுத்த வாரம்)

• ரஜினி : பத்திரிகையாளர்கள் கூட்டத்தில்...



"இப்போதுள்ள சூழ்நிலையில் நான் அரசியலில் நுழைந்தால் நிறைய குழப்பங்கள் உண்டாகும்" என்று சொல்லி தமது அரசியல் பிரவேச ஹேஷ்யங்களுக்குத் தாற்காலிகமாக ஒரு முற்றுப்புள்ளி வைத்திருக்கிறார் ரஜினி. அதே சமயம், ஜெயலலிதாவிற்கும் அவரது ஆட்சிக்கும் கடுமையான கண்டனங்களையும் தெரிவித்திருக்கிறார்.

ரஜினியிடமிருந்து ஒரு பரபரப்பான அறிவிப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவரது ரசிகர்கள், மற்றும் பொது மக்கள் 'ஹ்ம்.... அவ்வளவுதானா?' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டார்கள். 'இனிமேல் ஆர்.எம்.வீயின் கதி என்ன?' என்று கவலைப்பட்டுக் கொண்டார்கள். புரட்சித் தலைவியின் ரத்தங்கள் 'மனுஷன் பயந்துட்டான்யா!' என்று கர்வப்பட்டுக் கொண்டார்கள். ரஜினி அரசியலில் நுழைவதை விரும்பாத ஆனால் வெளிப்படையாகத் தங்கள் கருத்துக்களை வெளியே சொல்ல முடியாத பல எதிர்க்கட்சித் தலைவர்களுக்கு ரஜினி அறிவிப்பு ஆறுதலைக் கொடுத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

சமீப காலங்களில் மிக அதிகமாக நிருபர்கள், புகைப்படக்காரர்கள் கலந்து கொண்ட பத்திரிகையாளர் கூட்டம் ரஜினி நடத்தியதாகத்தான் இருக்கும். 'பன்னிரண்டரை (புதன்கிழமை – சரியான ராகுகாலம்) மணிக்கு சந்திப்பார்' என்று ரஜினியின் உதவியாளர்கள் அறிவித்திருந்தாலும் ஒரு மணி நேரத்திற்கு முன்பே, ரஜினியின் போயஸ் கார்டன் வீடு கலகலப்பாகி விட்டது. நேரம் நெருங்க நெருங்க உள்ளே கூட்டம் நடக்கும் அறைக்கதவின் அருகே நெருக்கடி அதிகமாகி விட்டது. பெரும்பாலான நிருபர்கள் 'ரசிகர்கள்' ஆகிவிட்டார்கள்.

கறுப்பு பேண்ட், சட்டை, வழக்கம் போல வாரி விடப்படாத தலை, கண்களில் கொஞ்சம் சோர்வு, கைகளில் சிகரெட். "No questions please" என்று எடுத்தவுடன் அறிவித்து விட்டார் ரஜினி. "சத்தி அதை உரக்கப் படிப்பா" என்றவுடன் ரசிகர் மன்றத் தலைவர் சத்தியநாராயணா அறிக்கையைப் படிக்கத் துவங்கினார். அதைத் தமக்கே உரிய மானரிஸங்களோடு கேட்டுக் கொண்டிருந்தார் ரஜினி. ஓர் இடத்தில் "வாழ வைக்கும் தமிழக மக்கள்" என்று சத்தி படிக்க "வாழ வைக்கும் தெய்வங்களான தமிழக மக்கள்" என்று திருத்தினார் ரஜினி. தெளிவாகப் புரிந்த ஒரு விஷயம் என்னவென்றால் அறிக்கையின் ஒவ்வொரு வாக்கியத்தையும் நன்கு யோசித்தே எழுதியிருக்கிறார் ரஜி

பரபரப்பை கொஞ்சம் ஒதுக்
கொஞ்சம் ஆழமாகப் படித்தால்,
காரணங்கள் நியாயமானவையே
துவங்கினால் என்ன ஆகி இருக்கு
களும், தலைவர்களும் வந்து இ
கறைபடிந்த கரங்களும், காலாவதி
இன்னமும் எட்டு மாத காலத்
முன்னர் கட்சியை ஒழுங்குப்ப
உழைப்பையும் ரஜினி இதற்கா
ளிக்க முடியாது. தங்கள் கட்சி
இயல்பாகவே எதிர்க்கட்சிகள்
வேண்டி வரும். வோட்டுக்கள்
போகும்.

அடுத்து இன்னொரு விஷயம், வர
தீவிரமாக இறங்கினால் தமது படங்க
துஷ்பிரயோகங்களால் பாதிக்கப்பட்டு
னால் தமது ரசிகர்களுக்கும், அ.தி.மு.க.
கள் வன்முறைக் களமாகி விடும் என்று
படம் கணிசமான அளவில் அரசியல்
இருக்கிறது. அந்த 'மெசேஜ்' மக்களுக்கு
ரஜினி விரும்புகிறார். இந்தக் காரண

# ஏமாற்றி

சரியான சமயமில்லை என்று அவர்
அறிக்கைக்குப் பிறகு சிலர் கொண்ட

ஆர்.எம்.வீயின் நிலைமையும் அ
வில்லை. இன்னும் சிறிது காலத்துக்கு
கள் கிடைக்காமல் போய்விடும், அவ்
என்பதை அவரிடமே கேளுங்கள்" என்
னார் ஆர்.எம்.வீ. ரஜினியின் முடிவை



• ஆர்.எம்.வீ. : அ

தள்ளி விட்டு, ரஜினியின் அறிக்கையை
தன் இப்படி ஒரு முடிவு எடுப்பதற்கான
ன்பது புரியவரும். அவர் தனிக்கட்சி
சகல கட்சிகளில் இருந்தும் தொண்டர்
ந்து கொள்வார்கள். அந்தக் கூட்டத்தில்
ழிப் போன முகங்களும் இருக்கக்கூடும்.
வர இருக்கும் பொதுத் தேர்தலுக்கு
க முடியாது. ஏகப்பட்ட நேரத்தையும்
துக்க வேண்டும். தமது தொழிலை கவ
பலவீனப்பட்டுப் போகும் சமயத்தில்,
ரஜினிக்கு எதிராக வியூகம் அமைக்க
ரியும். ஜெவுக்குக் கொண்டாட்டமாகப்

க்கும் 'முத்து' திரைப்படம். அரசியலில்
ன் ஒட்டம் ஆளும்கட்சியின் அதிகார
டுமோ என்று ரஜினி கருதுகிறார். இத
ருக்கும் மோதல்கள் நிகழ்ந்து தியேட்டர்
ாசிக்கிறார். அதிலும் குறிப்பாக 'முத்து'
யுள்ள வசனங்களோடு தயாரிக்கப்பட்டு
ரவலாகப் போய்ச் சேர வேண்டுமென்று
க்காகத்தான் அரசியலில் நுழைய இது

# விட்டாரா ரஜினி ?

ந்தியிருக்கலாம்... இதுதான் ரஜினியின்
டிவு.

வளவு கவலைக்கிடமாகப் போய்விட
லை வேளைகளில் பேசுவதற்கு மேடை
துதான்! "ரஜினி என்ன முடிவெடுப்பார்
27-ம் தேதிக்கு முன்னர் நம்மிடம் கூறி
தெரிந்து கொண்ட பின்னர்தான், தம்
முடைய கருத்துக்களைச்
சொல்லுகிற நிலையில் இருந்
தார் ஆர்.எம்.வீ. என்பது பேசி
யதில் புரிந்தது.



கட்சியை விட்டு நீக்கப்பட்ட ஆர்.எம்.வீ.யைச் சந்திக்க இடைமட்டத் தொண்டர்கள் நிறையப் பேர் வருகிறார்கள். பொன்னாடைகள், மாலைகள் என்று அமர்க்களப்படுத்துகிறார்கள். "ஏன்யா... கட்சியை விட்டு நீக்கினால் வருத்தப்பட்டுக் கொண்டு தானே இருக்கணும்; நீங்க சந்தோஷமாக மாலை போடறீங்களே?" என்று அவர்களிடம் கிண்டலடிக்கிறார் ஆர்.எம்.வீ. ஆனால் புத்திசாலியான ஆர்.எம்.வீ. அரசியலில் 'மிதக்கும்' உத்திகளை நன்கு அறிந்தவர். அவர் ரஜினிக்காக இன்னமும் காத்திருப்பார் என்றே தெரிகிறது.

ஆதரவாளர்களுடன்...

"மீண்டும் ஜெ. தேர்ந்தெடுக்கப்பட்டால் தமிழகத்தை ஆண்டவனால் கூட காப்பாற்ற முடியாது" என்று பளிச் சென்று சொன்னதன் மூலம் 'அடுத்த தேர்தலில் ஜெ. வெல்லவே கூடாது' என்ற தமது அபிப்பிராயத்தைத் தெளிவாக வெளியிட்டிருக்கிறார் ரஜினி. அ.தி. மு.க. தரப்பிலிருந்து கடுமையான எதிர் அறிக்கைகள் வரத் துவங்கியிருக்கின்றன. இதைத்தான் ரஜினி எதிர்பார்த்திருப்பார் என்று ஊகிக்கலாம். 'அரசியலில் தற்போது நுழையவில்லை' என்று சொல்லி நிறுத்தாமல், ஜெவையும் ஒரு பிடி பிடித்தபோதே, இப்போதைய 'உஷ்ணத்தை'த் தேர்தல் வரை கொண்டு போகும் புத்திசாலித்தனத்துடன் செயல்பட்டிருக்கிறார்.



அப்போது என்ன ஆகும்? ஆளும் கட்சி மேடைகளில் ரஜினி அலசப்படுவார். ரஜினியும் அவர் பங்குக்கு மாதம் ஒருமுறை ஜெ. ஆட்சியைப் பற்றி தமது சர்ச்சையை உருவாக்கும் கருத்துக்களை கூறிக் கொண்டே இருப்பார். இதனுடைய விளைவுகள் என்னவாக இருக்கும்? தேர்தலின் போது ஜெவுக்கு எதிரான ஒரு பலமான கூட்டணிக்கு ஆதரவாக ரஜினி பிரசாரம் செய்யலாம். அது காங்கிரஸ் கூட்டணியாகவும் இருக்கலாம்; தி.மு.கழகக் கூட்டணியாகவும் இருக்கலாம். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு கையை விட்டு நழுவிப் போன காங்கிரஸை நாடி ஜெ. ஓடக்கூடிய வாய்ப்பும் இருக்கிறது.



மொத்தத்தில் நாம் ஏற்கெனவே சொன்னபடி ரஜினி என்னும் புயல் இன்னமும் மையம் கொண்டுதானிருக்கிறது. அது எதிர்பார்த்தபடி 27-ம் தேதி கரையைக் கடக்கவில்லை! அதன் வீச்சும், பாதிப்பும் தேர்தலின் போதுதான் தெரியும்.

**- ப்ரியன்**

படங்கள் : ராஜு"நாராயண்

'**ஜா**டிக்கேத்த மூடி!' - புத்தம் புது டி.வி. தொடர். கணவன் மனைவியிடையேயான ஒற்றுமையைச் சோதித்துப் பரிசு வழங்குவார்கள். பரிசு...? மூடியுடன் ஒரு ஜாடி! இந்தப் போட்டியில் பங்கேற்ற தம்பதியினரிடையே வாக்குவாதம் முற்றிப் போக, கடைசியில் ஜாடி ஒருவருக்கு, மூடி ஒருவருக்கு என்று பரிசையே பிரித்துக் கொடுக்கும்படியாகி விட்டது!

"எப்போது ஒளிபரப்பானது இந்த நிகழ்ச்சி?" என்று நினைவுகளை அலச வேண்டாம்! ஏனென்றால் இந்த 'ஜாடிக்கேத்த மூடி!', டி.வி. நிகழ்ச்சிகளைக் கிண்டலடிக்கும் ஒரு டி.வி. தொடரில் இடம்பெறவுள்ள ஒரு பகுதிதான்!

'கிண்டலோ கிண்டல்' என்ற இந்த நிகழ்ச்சியை வழங்க இருப்பவர் ஒய்.ஜி. மகேந்திரா. ராஜ் டி.வி.யில் ஒளிபரப்பாகும். வயலும் வாழ்வும் முதல் பட்டிமன்றம் வரை அத்தனை நிகழ்ச்சிகளும் நையாண்டி செய்யப்படும். உதாரணமாக, 'மூஞ்சியைப் பாரு!' - இது அழகுக் கலை குறித்த நிகழ்ச்சியின் சடையர்.

டி.வி. டிராமாவைக் கிண்டலடிப்பதா கஷ்டம்? ஒரு காட்சியில் கல்யாணத் தரகர் ஒருவருக்குக் காப்பி வழங்கப்படுகிறது. அதைக் குடித்து விட்டு 'ஆ ரொம்ப சூடு!' என்று அவர் அலற... இதில் என்ன சிரிப்பு என்கிறீர்களா...? வழக்கம் போல் காப்பி தம்ளர் காலி தம்ளர்!

தாமே இணைப்புரையாளராக இருந்து நடத்திய மெட்ரோ ஆட்டம் நிகழ்ச்சியைக் கூட மகேந்திரா விட்டு வைக்கவில்லை. அதற்கு 'அம்மிக்கல் ஆட்டம்' என்று பெயரிட்டு பின்னியெடுத்திருக்கிறார். தம்மைத் தாமே கிண்டல் செய்து கொள்ளும் அளவுக்கு ஆரோக்கியமான கண்ணோட்டம்!

ஆப்பிரிக்க சமையல் ஐட்டங்களை 'திங்க வாங்க' நிகழ்ச்சியில் சொல்லித் தரப் போவது... பெண் வேடத்தில் வரும் ஒய்.ஜி.எம்! மேக் அப் போட்டு முடித்தபின் "சார்! அச்சு அசலா மதுவந்திக்கு அக்கா மாதிரி இருக்கீங்க" என்று கமெண்ட் அடித்தாராம் மேக்-அப் மேன். மதுவந்தி அந்த மேக்-அப் மேன் மீது மான நஷ்ட வழக்குத் தொடரா மலிருந்தால் சரி!



• "கல்யாண மாலை" நிகழ்ச்சி படப்பிடிப்பில்...

"**ரோ**ல் ஒவர் வீடியோ... ஆக்ஷன்..."

மாடிப் படிகளில் பேசியபடியே இரண்டு பேர் இறங்கி வருகிறார்கள்.

"என் பேர் கிருஷ்ணன். தஞ்சாவூர் ஜில்லா. எனக்கு ரெண்டு பொண்ணு; ஒரே பையன். ரெண்டு பொண்ணும் கல்யாணம் ஆகி, வெல் செட்டில்டு. இப்போ பையனுக்கு நல்ல இடமா பார்த்துக்கிட்டிருக்கோம்...."

"பையன் என்ன பண்ணறாரு?"

உடனடியாய் பதில் சொல்லாமல் படிக்கட்டில் இடறி விழாமல் இருக்க வேண்டுமே என்ற ஜாக்கிரதை உணர்வு காரணமாய், தலையைக் குனிந்து பார்க்க...

"கட்" சொல்கிறார் இயக்குனர்.

"கேஷுவலாய் பேசிக்கிட்டே படியிறங்கி வாங்க!"

அடுத்த டேக்கிலும் சிறு தவறு.



• பெண்ணாய் அசத்தும் மகேந்திரா...

# ஒய்.ஜி. மகேந்திராவின் கிண்டலோ கிண்டல்!

மறுபடி ஒரு டேக். 'ஷாட் ஓ.கே.' என்ற டைரக்டரின் குரலைக் கேட்டதும், வயதான அந்த அப்பாவுக்கு நிம்மதிப் பெருமூச்சு. துண்டால் வியர்வையைத் துடைத்துக் கொள்ளுகிறார். காரணம்: கேமரா முன் நிற்பது அவருக்குப் புதிய அனுபவம்!

அவர் நிஜமாகவே தன் மகனுக்குப் பெண் தேடுகிற அப்பா! அவர் கேமரா முன் பேசியது, நடராஜ் கிரியேஷன்ஸ், ஜெ.ஜெ. டீ.வி.க்காக தயாரிக்கும் 'கல்யாண மாலை' என்ற நிகழ்ச்சிக்காக. பத்திரிகைகளில் வெளி வரும் மணமகன்(ள்) தேவை விளம்பரம் போல இல்லாமல், இந்த நிகழ்ச்சியில் மணமகன்(ள்) அவர்களுடைய அப்பா, அம்மா மற்றும் குடும்பத்தினர் நேரடியாகவே டீ.வி.யில் தோன்றிப் பேசுகிறார்கள்!

"அந்தக் காலத்தில் நான் என் மனைவியைப் பெண் பார்க்கப் போன போது, ஓரிரு நிமிடங்கள் பெண்ணைக் கண்ணில் காட்டினார்கள். முகூர்த்தத்துக்குச் சில நிமிடங்கள் முன்புதான் மறுபடி அவளைப் பார்த்தேன். ஆனால் இன்று காலம்தான் எவ்வளவு மாறி விட்டது!" என்றார் சுப்ரமணியன் என்ற ஒரு அப்பா.

"பெண் பார்க்கிற படலம் நடத்தி, சம்பிரதாயமாய் என்னிடம், 'பையனைப் பிடித்திருக்கிறதா' என்று கேட்காமல், நானே டீ.வி. திரையில் தோன்றி, இப்படிப்பட்டவர்தான் எனக்குக் கணவராய் வர வேண்டும் என்று கூறுவது, ஒரு புரட்சி என்றே சொல்லுவேன்" என்கிறார் செல்வி ராஜேஸ்வரி.

"என் அம்மா ரொம்ப ஆர்த்தோடாக்ஸ். பிள்ளையைப் பெற்ற நாம் எதற்காக வலிந்து கொண்டு இப்படியெல்லாம் போகணும்?" என்பது அவரது கருத்து. அதனால்தான், 'நான் வரலை; நீங்க வேணும்னா போங்க' என்று சொல்லி விட்டார்" என்றார் தன் அப்பாவுடன் நிகழ்ச்சியில் பங்கேற்க வந்திருந்த ரவிசந்திரன். ஸ்கூல் நாளில் நாடகங்களில் நடித்திருப்பதால், இவருக்கு கேமரா பயமில்லையாம்!

"சென்னையில் மட்டுமின்றி, வெளியூர்களுக்கும் போய் ஷூட்டிங் நடத்தப் போகிறோம். இந்த நிகழ்ச்சியில் பங்கேற்க கட்டணம் ஏதுமில்லை" என்கிறார் 'கல்யாண மாலை' நிகழ்ச்சியில் பங்கேற்பவர்களை பேட்டி காணும் மோகன்.

"வருகிறவர்களுக்குக் கேமரா கூச்சம் தவிர்க்க முடியாதது. நிகழ்ச்சியோ, செயற்கைத்தனம் ஏதுமின்றி பார்ப்பவர்களைக் கவரும்விதமாய் இருக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். எனவே, டேக் - ரீடேக் என்று சிரமப்படத்தான் வேண்டியுள்ளது" என்கிறார் இயக்குனர் ஜெயலட்சுமி.

திருமணங்கள் சின்னத்திரையில் நிச்சயிக்கப்படப் போகின்றன!

— எஸ். சந்திரமௌலி

# புலருத் தாயம்

### போட்டிக் கதை-5

"லாஸ்ட் சாடர்டே சப்ளிமெண்ட்ல பாத்தேன். பணம் பூராவையும் ட்ரஸ்ட் ஃபார்ம் பண்ணி அப்படியே ஆறுகாலப் பூஜையையும் டாண்ணு நடத்திக்கிட்டு வர்றீங்கன்னு போட்டிருந்தது. இந்தக் காலத்துலே இதெல்லாம் கொஞ்சம் கொஞ்சமா தேஞ்சுக்கிட்டே வருது. பசங்க நெத்தியிலே விபூதியே பாக்க முடியறதில்லே. எப்பிடிப் பார்க்க முடியும்? அங்கதான் முடியை இழுத்து விட்றுக்கானே...

''அப்புறம் ஒரு விஷயம். இப்ப நான் வந்ததே அதுக்குத்தான். இந்தக் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் பண்ணணும்னு ஒரு ஆசை. ஆண்டவன் தாராளமா சொத்தைக் கொடுத்துட்டான். கூடவே ஒரு விலங்கத்தையும் இல்லை வெச்சுட்டான்... ம்... அதான் அவன் விளையாட்டு. எனக்கு ரெண்டு பசங்க. அடக்கமாத்தான் இருக்கானுங்க. ஆனா, எல்லாம் நேர்லதான்னு தோணுது. ஆண்ட எப்ப சாவான் மடம் எப்பக் காலியாவுன்னு இருக்கானுங்க. எதிர்ல அஞ்சு எடமும் குளிர பவ்யம்னா அப்பிடி ஒரு பவ்யம். முதுகுக்குப் பின்னால கெழவனை ஏச்சுட்டன் பாத்தியான்னு ஒரு நமுட்டுச் சிரிப்பு... என்னை முட்டாப்பயன்னு நெனச்சிருக்கானுங்க.

"எல்லாம் என் சுயார்ஜிதம்... கோர்ட்டு கேஸ்ன்னு போனா அவனுங்க தலையில துண்டுதான். நான் முட்டாளில்லேடா. காட்டப் போறேன். இவனுங்களுக்குச் செய்யறத தெருவுல ஒடுதே நாயி. அதுக்குச் செஞ்சா நன்னியாவது இருக்கும். இந்தக் கோயில்ல கும்பாபிஷேகம் நடத்தி ஒரு தூண் ஓரத்துல சொச்ச நாளை ஒட்டணுமின்னு வெறியே வந்துடிச்சு. எம் பொண்டாட்டிக் கௌவி பசங்க பசங்கன்னு ஆடறா. ஆடட்டும்... அவளுக்கும் துண்டு போட்டு வச்சுடறேன், தூணுக்குப் பக்கத்துலியே. ரெண்டு நாளுல வாயிலயும் வயித்துலயும் தன்னால அடிச்சுக் கிட்டு இங்கதான வரப் போறா..."

அந்த மனிதர் பெரிய குரலில் மாலியிடம் சொல்லிக் கொண்டிருந்தார். கையால் காதைக் குவித்துக் கேட்டுக் கொண்டிருந்த மாலி துண்டை உதறினார். "பாபி... பாபி" என்றபடியே ஆற்றங்கரை நோக்கிப் போனார்.

"என்னங்க இது... நான் எவ்வளவு சிரத்தையாய்ச் சொல்லிக்கிட்டு வரேன். எந்திரிச்சுப் போறாரு."

"என்ன ஆச்சுன்னுதான் எங்களுக்கும் தெரியலே. ஆனா கொஞ்ச நாளாத்தான், புரியாமப் பேசறது, சாமியார் மாதிரி உம்னு இருக்கறது எல்லாம்...'' குருக்கள் அவருக்கு எதிரில் அமர்ந்தார்.

அடுத்த காலப்பூஜைக்கு இன்னும் அவகாசமிருக்கிறது. வீட்டுக்குப் போய் விட்டு வரலாம் தான். ஆனால் வீட்டில் என்ன வைத்திருக்கிறது. இங்கே ஒரு மனிதர் ஆவலோடு அமர்ந்திருக்கிறார் தான் சொல்வதைக் கேட்க. பேச்சுக்கு ஆள் கிடைத்து அசைபோட விஷயமும் இருந்துவிட்டால் வேறு என்ன வேண்டும்... போஜனமாவது போஷாக்காவது...

குருக்களின் கண்முன்னே மாலியின் கடந்த



காலம் விரிய ஆரம்பித்தது.

“விசாலம்... பிட்லையைப் பண்ணது மட்டும் நீதானே, ஒளிக்காம சொல்லு. வாத்தியாராத்து சிமந்தத்துலே ஆயிரத்தெட்டு அம் மாமிகள் அடுப்பங்கரைல நுழைஞ்சிருக்கலாம். மல்லியோட அளவு வெச்சே, அது மணக்கறத வச்சே அது ஒன்னோட கைதான்னு என் கண்ணு பொட்டையாப் போனாக்க கூடச் சொல்ல முடியும்...” மாலி தன் வீட்டு வாசலில் தூணில் சாய்ந்தபடி கண்ணைச் சிமிட்டியபடி கேட்கிறார்.

விசாலம் பதிலுக்கு ஒரு சிரிப்புச் சிரிக்கிறாள். அதுவே எதேஷ்டம். அவள் என்றுமே வார்த்தைகளை விரயம் செய்ததில்லை.

“ஏன்னா... என்ன பண்ணினேள் அப்படி. அந்தச் சம்பந்தி பிராமணன் வாத்தியார்கிட்டே தடார் தடார்னு எகிறினார். நீங்க தனியா அழைச்சிண்டு போனது வரைக்கும் பார்த்தேன். அப்புறம் கட்டின பசுவாட்டம் ஒங்க கிட்டயே ஈஷிண்டு இருந்தார்.”

“அதுவா... பிரம்மபத்ரம் பண்ணின வேலை. மனுஷனுக்குப் பல்லத் தேய்ச்சானதுமே ஒரு கோஸ் கடைவாயில பொகையிலய அடக்கிக்கணும். அந்தக் காரத்துக்கு அப்புறம்தான் காப்பியே... வாத்தியார் பீதாம்பரம் விரிச்ச என்ன புண்ணியம். பிரதான ஐட்டம் இல்லேன்னதும் சம்பந்தி சாமி ஆடிட்டார். கறுப்புப் படிஞ்ச பல்லைப் பார்த்ததும் எனக்குப் படார்னு மட்டைக்கு ரெண்டு இத்துன்னு புரிஞ்சு போச்சு. கிழத்தெரு சாயபு கிட்டே ஓடினேன். அவன் பொகையிலைன்னா பொணமும் எழுந்து கைய நீட்டுமே. ரெண்டே மட்டை... ஜோலி முடிஞ்சுது...”

மாலி திண்ணையிலேயே படுத்துக் கொண்டார். விசாலம் உள்ளே போனாள்.

•

அந்த ஊரின் அதிசயமான தம்பதிகள் அவர்கள். எந்த வீட்டு வைபவமானாலும் அவர் வெளிக் காரியங்களுக்கும், விசாலம் அடுக்களைக்கும் ஆஜராகி விடுவார்கள். அழைக்க வேண்டும் என்பதில்லை. காரியம் பூரணமாக முடிந்த பின்பே வீடு திரும்புவார்கள்.

சாப்பாட்டிற்காக அவர்கள் போகிறார்கள் என்று ஜாடை பேசியிருக்கிறார்கள். பேசியவர்

**சுப்ரமணியன் ரவிச்சந்திரன்**

கள் வீட்டு வைபவமாக இல்லாதபோது... அவர்கள் வீட்டு விசேஷம் என்னும் போது மாலி வேண்டித்தானிருந்தார். பெரும்பாலான நேரங்கள் மோர் சாதம் மட்டுமே கிடைக்கும். அதுதான் மீந்ததாக இருக்கும்.

அவர்கள் நுழைந்த காரியம் நிரக்கவே செய்தது. ஊராருடைய சிக்கலைத் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டதால் சம்பந்தப்பட்டவர்கள் விருந்துக்கு வந்தவர்கள போல விச்ராந்தியாக இருக்காமல் என்ன செய்வார்கள்!

மற்றபடி மாலிக்கு நிரந்தர வருமானம் எதுவும் இல்லை. உள்ளூரில் வேலை இல்லாத போது வெளியூர் போய் விடுவார். இரண்டு மூன்று தேறும்.

விசுவநாதன் பிறந்தான். விசுவநாதன் மாலியின் சாயல், விசாலத்தின் நிறம். தங்க ரேக்கு. சுருள்சுருளாய் அதே நேரம் கறுப்புப் பஞ்சாய் மிருதுவாய்க் கேசம். கண்களில் அடங்கிய ஜ்வாலை போலச் சுடர்.. விக்கிரகம்.

மாலிக்கு அவன் மற்றொரு உலகமானான். அவருடைய வறுமைக்காக அவர் வருந்தியது அப்போதுதான்.

ஆனால் குழந்தை வாடவில்லை. அப்பாவின் பாசத்தையும், பசியையும் ஒன்றாய் நினைத்தே அள்ளிக் குடித்தது.

“விசாலம்... பகவான் நல்ல வியாபாரிதான்டி. விசுவுக்கு வசதி குடுக்கலியே தவிர, அதுக்குப் பதிலா கொள்ளை கொள்ளையா அறிவைக் குடுத்திருக்கான் பாரு... அவன் தராசுல எந்தத் தட்டும் ஏறி எறங்கியோ எடை மாறியோ இருக்கறதில்லே. கவனிச்சியா...”

விசாலம் கோபுரக் கலசத்தை நோக்கிக் கண்மூடிக் கைதொழுதாள்.

விசு வளர்ந்தான் எல்லாவற்றிலும்.



சொற்பமான வாய்ப்புக் கிடைத்த போதும் ஒரு சொட்டுக் கூட விடாமல் உறிஞ்சி விருட்ச மரணான்.

அவன் நன்கு கிளைபரப்பிக் கனி கொடுக்க வேண்டிய நேரத்தில் விசாலம் சித்ரகுப்தனின் பார்வையில் பட்டு விட்டாள்.

"ஹ்ம்... கொடுத்து வைக்காத பாவி..." மாலி காரியமெல்லாம் ஆகி, கிடைத்த வெறுமையின் போது புலம்பினார்.

**"நா**ன் சங்கரன்... பூர்வீகம் திப்பிராஜ புரம். ரிடயர்ட் தாசில்தார். ஒரே பொண்ணு. பேரு அகிலா. ஒங்க பையனைப் பத்தி அவரோட ஆபீசர், என் க்ளாஸ்மேட்தான், ரொம்பப் பிரஸ்தாபிச்சான். ஸ்மார்ட் அண்ட் இண்டலிஜெண்டுன்னு... இன்னும் ப்ரைட்டா வர சான்ஸ் இருக்குன்னு. அவன் சாதாரணமாக வாயத் தொறக்க மாட்டான். தன் கைய ஊனி வர்றவாதான் காசு அருமை, லைஃபோட பெருமை எல்லாம் தெரிஞ்சு வச்சிருப்பா... என் பொண்ணுக்கு நல்ல அயனான எடம் அமையலாம். இருந்தாலும் இந்தக் காரணத்துக்காகத் தான் ஒங்ககிட்டே சம்பந்தம் பேச வந்தேன். அதுக்காகச் சீர் செனத்திலே இழுத்துப்புடிச்சுடுவேன்னு நெனக்க வேண்டாம். ஒரு மனுஷன், தாயாரோட கர்மகாரியத்துக்கும், பொண்ணோட கல்யாணத்துக்கும் கணக்கே பார்க்கக் கூடாதுன்னு என்னோட சாஸ்திரம்..."

சங்கரன் சொன்னபடியே செய்தார். நகரத்தில் ஆபீசுக்குப் பக்கத்தில் ஒரு ஃப்ளாட்டை வாங்கிக் குடியும் அமர்த்தினார்.

"அப்பா... இனிமே அந்த ஊர்ல என்ன இருக்கு? இங்க என்னோட இருங்கோ... டீவி இருக்கு... டேப்ரிகார்டர் இருக்கு. பத்துத் தப்படி போனா பார்த்தசாரதி கோயில்... ஹாய்யா ரெஸ்ட் எடுக்கலாம்."

மாலி சிரித்தார். "ஆற்றங்கரையும், தோப்பின் பச்சையும், ஊரில் எல்லா வீட்டுக் காரியங்களையும் எடுத்துப் போட்டுச் செய்யும் சௌஜன்யமும் இல்லாம இங்கே நான் எப்படி இருக்கறது? ஒடம்புல தெம்பு இருக்கறவரைக்கும் ஓடி ஆடத்தான் தோணறதே தவிர ஒக்கார மனசு வர மாட்டேங்கறதே..."

மாலிக்குச் சுயம்போகம் ஓடியது. அதுவும் கொஞ்ச நாள்தான்... பக்கத்து ஊரில் ஒரு கல்யாணத்துக்குப் போன போது ரமணியின் நட்பு கிடைத்தது. கட்டுக் குடுமியும், கடுக்கனுமாய் சொப்புக்குக் கைகால் முளைத்தாற்போல தேஜஸ் குறையாமல், அந்தப் பத்து வயதுப் பாலகன் அனாதை என்ற ஒரே காரணத்தால் அவரைக் கட்டிப் போட்டான். அவனை ஊருக்கு அழைத்து வந்தார்.

"என்ன ஓய்... இது யாருங்காணும் சுவீகாரம்... நல்லா ஆப்ட்டான்..." குச்சியால்

பல்லைக் குத்திக் கொண்டே கேட்டது அக்கிர காரம்.

"ஏண்டா... எங்கிட்ட எதுக்குக் குடுக் கறே.. ஒன் பொட்டியில வச்சக்கோ..."

"இல்ல மாமா... எனக்கு எதுக்கு... பூரிப் பணம் குடுத்தா... ஓங்ககிட்ட இருக்கட்டும்... எனக்குன்னு யாரு இருக்கா?"

ரமணிக்கு வேலை இல்லாத நாட்களில் கோயில் நந்தவனத்தின் பவளமல்லிப் பூத் தொடுத்துக் கொடுக்கும் வேலை. மடைப் பள்ளிக்கு, அபிஷேகத்திற்கு நீர் இறைக்கும் வேலை. அப்படி ஒன்றும் எல்லாக் காலமும் நடக்காது. நடக்கும் ஒரு வேளைக்காவது... இதுபோக மாலியின் வேஷ்டி, அவனுடையது எல்லாம் ஆற்றில் அலசிக் காய வைப்பான். மாலியின் கைச் சமையலுக்குச் சித்துக் காரியம்.

"மாலி, பய பம்பரமா இருக்கான். ஓய், உமக்கு யோகந்தாங்காணும். பாரும் அந்தக் கடுக்கணும் குடுமியும். ஆம்பளச் சம்சாரம்..." பட்டாமணியம் சொல்லச் சொல்ல மாலி நெகிழ்ந்தார்.

"ரமணி... கும்மோணம் போறேன். கல்யாணம் முடிஞ்சு வர மூணு நாளாகும். அப் பிடியே மாயோரம், சிய்யாழின்னு நாலு கோயில் பாத்துட்டு வரேன்... நீதான் வலங்கி மான் அங்க இங்கன்னு போகப் போறேன் னுட்டே. இல்லன்னா நீயும் கௌம்பலாம். தனியா இருக்கப் பயமா இருந்தா ஆத்தைப் பூட்டிட்டுக் கர்ணீயர் வீட்டுத் திண்ணைல படுத்துக்கோ, காத்து பிச்சண்டு போகும்..."

கும்பகோணம் கல்யாணத்தில் நிறையக் கொடுத்தார்கள். ரமணிக்கு ஏதாவது வாங்க லாம். என்ன வாங்கலாம். பயலுக்கு ஒரு பட்டு எடுத்துச் சுற்றிப் பார்க்க வேண்டும். ஆவணி அவிட்டம் வேறு பத்து நாளில் வருகிறது.

கல்யாண கோஷ்டியே இரண்டு கோயில் களுக்கு அழைத்துப் போனார்கள். வேனில் இடம் இருந்தது. பட்டையும் உபரியாய் அவர் களே வாங்கிக் கொடுத்தனர். அவர்களுக்கு இந்தச் செலவெல்லாம் மூக்கு ஓட்டைக்குக் காணாது.

எல்லாம் முடிந்து ரயிலிலிருந்து இறங்கி னார். இந்தப் பக்கம் ரயில்வே லயன்... அந்தப் பக்கம் ஆற்றங்கரை... அதற்கப்பால் மயானம்.

யார் போய் விட்டார்கள். சாமண்ணாத் தாத்தாவா... அவர்தான் இப்போதைக்கு உதிரப் போகும் மட்டை. ஆனால் அவர் வீட்டு ஆசாமிகளை யாரையும் காணோம். ஓடினார்.

"வாரும் ஓய்... போற எடம் சொல்லிட்டுப் போகப்படாதா... நந்தவனத்துலே பகல்லியே யாரும் போக மாட்டா. அஸ்தமிச்சப் போய் இருக்கான்... ஏற்கெனவே சட்டை உரிச்சு நிறைய கிடக்கும். வாய் நுரைக்க நுரைக்க ஓடி வந்தான். கை மீறிப் போச்சு. கோவிந்தாக் கொள்ளி போடற நேரத்துக்கு வந்துட்டே..."

சிரிப்பு மாறாமல் கிடக்கும் ரமணியைக் கண்டதும் துக்கம் உடைத்துக் கொண்டு வந்தது மாலிக்கு. "ரமணி என் கண்ணே... சொல்லாமல் வந்தே.. சொல்லிக்காமலேயே போயிட்டியேடா மகாபாவி..."

"கோவிந்தாக் கொள்ளியா... என் கொழந்த அவன். நகருங்கோ எல்லாரும். நான் சம்ஸ் காரம் பண்றேன்" கூட்டம் அட பைத்தியமே, என்று நகர்ந்தது. பட்டு வஸ்திரம் கோடி யானது.

ஸ்நானம் செய்தார். காதில் ஜலம் புகுந்து அடைத்துக் கொண்டது. அடைப்பு சரியாக வில்லை.

மாலியைப் போட்டோ பிடித்தார்கள். லாட்ரி ஏஜெண்ட் மாலியுடன் ஒரு போட்டோ எடுத்துக் கொண்டார்.

மாலிக்கு எப்போது என்று ஞாபகமில்லை. கும்பகோணமாக இருக்கும். ஏதோ வாங்கின போது பாக்கிச் சில்லறைக்குப் பதில் இந்த லாட்டரிச் சீட்டைக் கடைக்காரன் கொடுத்து விட்டான். சத்தம் போட்டார். ஆனால் கால அவகாசம் இடம்கொடுக்காததால் வேறு வழியின்றி சீட்டை சட்டையில் வைத்தது ஞாபகத்திற்கு வந்தது.

'அன்புள்ள அப்பா,

நமஸ்காரம். இப்பவும் அகிலாவும், ஐஸ்வர் யாவும், சௌக்கியம்... வேலைத் தொந்தரவால் உங்களை நேரில் பார்க்க முடியவில்லை. ஒண்டியாக நீங்கள் அங்கு சாப்பாட்டிற்குக் கஷ்டப்படுவதையும், காது வேறு கேட்காமல் இருப்பதையும் கேள்விப்பட்டேன். பெற்ற மகன் இருந்தும் இந்த நிலைமை தேவைதானா?

அகிலாவுக்கும் இதேதான் மனசில். நீங்கள் வரும் நாளை எழுதவும்.

வேணும் தங்கள் ஆசீர்வாதம்,

இப்படிக்கு,

விஸ்வநாதன்.'

"அப்புறம் என்ன ஓய்... ஜம்முன்னு பேத்தியக் கொஞ்சிண்டு சொச்ச காலத்தையும் கழியும். காதுல ஹியரிங் எய்ட் வேற போட் டுண்டுடும். எல்லாம் கூடி வர்றது.. நம்ம பஞ்சாமி மாப்பிள்ள ராத்திரிக்கு மெட்ராஸ் போறான்.. கார் சும்மாதான் போறது."

குருக்கள் இடைவெளி விட்டு பெருமூச் செறிந்தார்.

"ரொம்ப சந்தோஷமாய்ப் போனார்.



## அன்பான வேண்டுகோள்!

மேலே புகைப்படத்தில் உள்ள இக் குழந்தைகள் சிவானந்த குருகுலத்தில் தங்களுடைய பேருத வியாலும், அரசு உதவியாலும் அடைக்கலம் பெற்று அமைதியான முறையில் வளர்கின்றனர். லாவண்யா என்று நாங்கள் பெயரிட்டு அழைக்கும் குழந்தையும் அஞ்சலி என்ற குழந்தையும் செங்கல்பட்டு மருத்துவமனை மற்றும் தாம்பரம் பூங்காவில் ஆதரவற்ற நிலையில் 60 நாள் சிசுவாக கிடைக்கப் பெற்று உங்களுடைய உதவியால் எல்லாப் பயனும் நல்கி தங்களுடைய எதிர் காலத்தை எதிர்நோக்கிக் கொண்டுள்ளனர்.

தீபாவளித் திருநாள் ஒரு தேசிய பண்டிகை. இத்திருநாளில் இக்குருகுலத்திற்கு உதவி செய்து வரும் அனைத்து நன்கொடையாளர்களுக்கும், பொது மக்களுக்கும் எல்லா நன்மைகள் கிடைக்கவும், இத் தீபாவளி திருநாளை கொண்டாடவும் இக்குருகுலக் குழந்தைகளும், முதியோர்களும் பிரார்த் திக்கின்றனர். வசதியுள்ளவர்கள் அவரவர் வசதிக்கேற்ப பண்டிகைகளும், விழாக்களையும் கொண்டாடும் போது ஆதரவற்றோர், கைம்பெண்கள், முதியோர், பார்வையற்றோர், காது கேளாதோர், மனநிலை பாதிக்கப்பட்டோர், ஊனமுற்றோர் மற்றும் பலர் யாரிடம் யாசிப்பது? கலியுகத்தில் இப்படிப்பட்ட வர்களுக்கு உதவி செய்வது ஆண்டவனுக்கு செய்யும் பணி என்று வேதங்களும், பைபிளும், குரானும் மற்ற மதங்களும் பறைசாற்றுகிறது.

சிவானந்த குருகுலத்தில் 250 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இத் தீபாவளி திருநாளை கொண்டாடவும் அவர்களுக்கு புத்தாடைகள், இனிப்புகள், பட்டாசுகள் வாங்க நிதியுதவி தேவைப் படுகிறது. இச் செய்தியை படிக்கும் ஒவ்வொரு அன்பரும் தலா ரூபாய் ஒன்று நன்கொடை அனுப்பி வைத்தால் கூட இப்புனித காரியம் சிறப்பாக நடந்தேறும். மேலும் துணியாகவோ, பட்டாசுகளாகவோ, இனிப்புகளாகவோ மனமுவந்து நன்கொடை கொடுத்து உதவி செய்யுமாறு வேண்டுகிறோம். காசோலை, டிராப்ட் மற்றும் மணியார்டர் மூலமாக நன்கொடை வழங்குமாறும் இவ்வேண்டுகோளை இக் குழந்தைகள் நலனை முன்னிட்டு கோரப்படுகிறது.

சிவானந்த ஆசிரமக் குழந்தைகளுக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமானவரி இலாகா வின் பிரிவு 80G படிவத்தின்படி வருமானவரி விலக்கு சான்றிதழ் உண்டு. நன்கொடையாளர்கள் அனுப்ப வேண்டிய முகவரி :

**நிர்வாகி,**
**"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"**
**நெ. 20, கம்பர் தெரு,**
**கிழக்கு தாம்பரம், சென்னை - 600 059.**
**தொலைபேசி எண் : 2369078, 402354**

# திருமுருகா

## பைனான்ஸ் - ரியல் எஸ்டேட்

73, ரங்கநாதன் தெரு, வி. கே. கே. டிரேட் சென்டர், (2 வது மாடி) தி. நகர்,
சென்னை - 17. தொலைபேசி : 4347833/6260079



டெபாசிட்களுக்கு ஆண்டு வட்டி

# 30%+4%

**INCENTIVE**

(அல்லது) வெள்ளி குத்துவிளக்கு

பென்ஷன்தாரர்களுக்கு 1% கூடுதல் வட்டி வழங்கப்படும் குறைந்தபட்ச டெபாசிட் ரூ. 5000/- டெபாசிட் செய்வோர் 'திருமுருகா பைனான்ஸ்' என்ற பெயரில் Cheque/DD அனுப்பவேண்டும்

ஒவ்வொரு ரூ.1000/- டெபாசிட்டுக்கும் ஒரு பரிசுக் கூப்பன் வழங்கப்படும். 24-3-96 அன்று பரிசுக் கூப்பன்களுக்கு குலுக்கல் நடத்தி கீழ்க்கண்ட பரிசுகள் வழங்கப்படும்.

**முதல் பரிசு ஒரு மாருதி கார்**

| | |
|---|---|
| 2-வது பரிசு | வஜ்ஜிரவேல் நகரில் ஒரு வீட்டு மனை |
| 3-வது பரிசு | ஒரு கைனெட்டிக் ஹோண்டா ஸ்கூட்டர் |
| 4-வது பரிசு | ஒரு கலர் டி. வி. |
| 5-வது பரிசு | ஒரு பிரிட்ஜ் |
| 6-வது பரிசு | ஒரு மிக்சி |
| 7-வது பரிசு | ஒரு ஸ்போர்ட்ஸ் சைக்கிள் |
| 8-வது பரிசு | ஒரு பிரஷர் குக்கர் |
| 9-வது பரிசு | ஒரு சீலிங் பேன் (மின் விசிறி) |
| 10-வது பரிசு | ஒரு வாட்டர் பில்டர் |

முதல் பரிசு



செவ்வாய் விடுமுறை



சிதம்பரம் சலூன் கடை ஒன்றில் காணப்பட்ட வாசகம் இது:
"உடல் மண்ணுக்கு"
"உயிர் ரஜினிக்கு"
"ஆவி நக்மாவுக்கு"
-என்.ஆர்.பாஸ்கரன்



---

அடுத்த நாள் சாயரட்சை வந்துட்டார். போன எடத்துலே ஹியரிங் எய்டும் தொலைஞ்சுடுத்து. திடுதிடுன்னு ட்ரஸ்ட் அது இதுன்னார். கோயில்ல அப்புறந்தான் வெளக்கு எல்லாம் ஒழுங்கா எரியறது. கலகலன்னு பேசிண்டிருப்பார். ஹ்ம்... அங்க என்ன ஆச்சோ... அப்புறம் இந்தக் கோயில்தான்."

"சாமீ. அவுரு இப்ப எங்க இருப்பார்?"

"இது பகவான் காரியம். நீங்க அதோட அருமை தெரிஞ்சவர். நீங்கதான் லாயக்குன்னு முடிவு பண்ணிட்டேன். குருக்கள் எல்லாம் சொன்னார்." ஆற்றங்கரையில் அமர்ந்திருந்த மாலியிடம் சொன்னார்.

"மண்ணாங்கட்டி.... அவ்வளவும் துர்க்குணம். குருக்கள் என்ன சொன்னார். வெளக்கெரியுதுன்னா அது எதனால... ஆண்டவன் மேல வந்த ஈடுபாட்டாலா... இல்லே அகங்காரத்துல..."

முன்பு என்ன நடந்தது?

காரில் போகும்போது மாலி சின்னக் குழந்தையைப் போல உற்சாகமாய்ப் போனார். தபால் போடும் போது நான்கு நாள் கழித்து வருவதாகத்தான் எழுதினார். திடுமென்று நின்றால் விசு அசந்து விடுவான். ஹியரிங் எய்ட் போட்ட விஷயத்தை அப்புறம் சொல்ல வேண்டும். பையில் வைத்துக் கொண்டார். கடைசியாக இந்த லட்ச ரூபாயை கொட்டி அவனைத் திணறடிக்க வேண்டும்.

விஸ்வநாதனும், அகிலாவும் உண்மையில் அசந்து போனார்கள். 'தாத்தா தாத்தா' என்று பேத்தி மடியில் புரண்டாள்.

இரவு சாப்பாடு ஆகிப்படுத்தவர் திடீரென்று விழிப்புத் தட்ட எழுந்து கொண்டார். இதென்ன ஹாலில் விளக்கு எரிகிறது. மாட்டுப் பெண் விசுவிடம் கையை ஆட்டி வாதம் செய்து கொண்டிருக்கிறாள். பையைத் துழாவி ஹியரிங் எய்டைப் பொருத்திக் கொண்டார். எழ நினைத்தவர் அப்படியே அமர்ந்தார்.

"எங்கிட்ட சொல்லாமக் கூட அவரை லெட்டர் எழுதி வரவழைத்தது எதுக்காம். அவரும் அவர் வேட்டியும்... பேத்திக்கு வாங்கிண்டு வந்திருக்கிற அனிஞ்ச வாழைப்பழத்துலியே அவர் பவிஷு தெரியறதே... உவ்வே..."

"முண்டம்.. பாக்கத்தான் அழுக்கு வேட்டி.. வேல்யூ என்ன தெரியுமா.. ஒன் லாக்.. லாட்டரிப் பணம் வச்சிருக்காருடி. நாலு நாள் நீ பண்ற சோடசோபசாரத்துல அவர் அதைக் கக்கிடுவார். அப்புறம் மெதுவாக் கழட்டி உட ஒனக்குச் சொல்லியா தரணும்..." விளக்கு அணைந்தது.

மாலி ஹியரிங் எய்டைக் கழற்றிப் பார்வையான இடத்தில் வைத்தார். விஸ்வநாதன் புத்திசாலி. அதைப் பார்த்ததுமேதான் இரவே சொல்லாமல் போன காரியத்தைப் புரிந்து கொள்வான்.

மாலி அழுதார்.

"பையன் விசுவாசமா, பாசமா இல்லேங்கற கோவத்துல கோயிலுக்கு எழுதி வச்சேன். அப்புறம் யோசிச்சேன். அவந்தான் சின்னப் பையன் ஏதோ சொல்லிட்டான். நான் என்ன பண்ணியிருக்கணும், அவங்கையில ரூவாயைக் குடுத்துட்டு, அய்யா நீயாவது சொகப்படுன்னு கெளம்பியிருக்கணும். அதுதான் கைம்மாறு பாக்காத தகப்பன் கடமை... அப்பிடிச் செஞ்சிருந்தா அவனும் என்னிக்காவது உணருவான். ரத்த சம்பந்தமில்லாத ரமணிக்குப் பட்டு சாத்தினேன். எம் பையனுக்கு... ப்ச்.. சுயநலம் எனக்கே இருக்கறச்சே எம் பையனை நான் சொல்லலாமா...

"அனுபவப்பட்ட நான் சொல்றேன் கேளுங்கோ. பணத்தை போய்ப் பசங்களுக்குப் பங்கிடு பண்ணுங்கோ. கைமாறு கருதாதது தான் பாசம்ங்கறதப் புரிய வையுங்கோ. நம்ம மனசுலே அழுக்கை வச்சுண்டு, அவாளுக்குப் பக்தி வரலேன்னு அடிச்சுக்கறதுலே அர்த்தமே யில்லே. நாளைக்கு அவாளுக்குத் தலை நரைக்கறச்சே தன்னோட பசங்க மூலமா உங்க செய்கைக்கு அர்த்தம் தெரிஞ்சுண்டு ஒங்களை நெனச்சுப் பாப்பா.

"இப்போ புனருத்தாரணம் கோயிலுக்குத் தேவைப்படலே. நமக்குத்தான்..."

மாலி எழுந்து கொண்டார். வந்தவர் தொடர்ந்தார்.

✉ "மெகா அமைச்சரவை; மகா வேடிக்கை" தலையங்கம் மிக அருமை. அறிவுரை என்பது எப்பவும் பிறருக்குத்தான் என்பதே ஆட்சியாளர்களுக்குக் கொள்கையாகிப் போய் விட்டதை அருமையாகச் சாடியுள்ளது பாராட்டுக்குரியது!
மதுரை – 16, பி. காந்திமதி.

✉ தேவை ஒரு மாற்றம் என்பதை அரசியல் ரஜினி கட்டுரை தெளிவாக எடுத்துக்காட்டியது. ரஜினிகாந்த் தமிழக அரசியலுக்கு அவசியம் வர வேண்டும். பின்வாங்கக் கூடாது. நேர்மையான மனிதர் என்பதை அறிவோம். மனிதநேயத்துடன் நடந்து தமிழகத்தை தலைநிமிர்த்தவும் முன்வர வேண்டும்.
திருமங்கலக்குடி, ஐ. சாந்து உஸ்மானி.

## ரூ 20 பரிசு பெறும் கடிதம்

✉ 'தனிமையையும், அமைதியையும் விரும்பும் ரஜினி ஓர் அரசியல் தலைவராகத் தம்மை மாற்றிக் கொள்வாரா?' பொருள் பொதிந்த ஒற்றை வரிக் கேள்வியில் ஓராயிரம் உண்மைகளை உணரச் செய்து விட்டீர்கள்! இன்றைய அரசியல் சூழ்நிலையில், ரஜினி அரசியலுக்கு வருவது அத்தனை ஆரோக்கியமானது அல்ல! பெரியார், அண்ணா போன்ற தலைவர்களு

பின்வாங்கக் கூடாது!

டன் நேரடித் தொடர்பு கொண்டு, சினிமா வாழ்க்கையுடன், அரசியலையும் இணைத்தே வந்ததினால்தான் எம்.ஜி.ஆர். பத்தாண்டுகள் ஆட்சியில் நீடிக்க முடிந்தது. ஆனால், ரஜினி அவர்களின் நிலை அவ்வாறில்லை. தமது வித்தியாசமான நடிப்பால் தமிழக மக்கள் இதயங்களில் தனி இடத்தைப் பிடித்துள்ளவர். போட்டி பலமாக உள்ள அரசியலில் காலை முன்னே வைத்து விட்டால், ஆட்சியைப் பிடிக்க, கஷ்டப்பட்டு சம்பாதித்த பணத்தைத் தண்ணீராகச் செலவழிக்க வேண்டும். பின் இழந்த பணத்தைக் கஷ்டமில்லாமல் எடுக்க 'ஊழல்' சாக்கடையில் விழ நேரிடும். இந்தச் சூழ்நிலையில் அவரை வைத்து 'முன்னுக்கு' வர நினைப்பவர்களின் ஊழல்களையும் கண்டுகொள்ளக் கூடாது. தட்டிக் கேட்டால் தனிக் கட்சி ஆரம்பித்து விடுவார்கள்! எனவே அரசியல் குட்டையில் கால் வைக்காமல் எட்ட இருந்தே தமது ஆதரவு யாருக்கு என அவருடைய ரசிகர்களுக்கு தெரிவித்து, என்றும் 'சூப்பர் ஸ்டார்' ரஜினியாகவே பவனிவர வேண்டும் என்பதே என் போன்றோரின் கருத்து.
சென்னை – 78, பூங்கோதை குப்புஸ்வாமி.

✉ ராசய்யா சினிமா விமர்சனம் நல்ல தெளிவான வார்த்தைகளில் நெற்றியடியாய் அமைந்திருந்தது. விமர்சன கருத்துக்களை இவ்வளவு துணிச்சலோடு சொல்லியும் இன்றைய தமிழ்ப்பட இயக்குனர்கள் திருந்தாமல் உள்ளார்களே என்பதுதான் வேதனை!
தோழகிரிப்பட்டி, இரா. முத்துக்குமரன்.

✉ "திருமகள் தோத்திரம்" – இலவச இணைப்பு சரியான தருணத்தில் வழங்கப்பட்ட வரப்பிரசாதம். காலா காலத்திற்கும் பூஜையில் போற்றிப் பாதுகாக்க வேண்டிய அரிய பொக்கிஷம். நன்றிகள் பல கோடி!
திருச்சி – 8, மா. நளினி.

✉ "நுணுக்கமான வேலைப்பாடுகளுடன் கூடிய அழகான ஜப்பானிய கொலு பொம்மைகள் ஒவ்வொன்றுக்கும் பின்னணியில் ஒரு கதை இருப்பது ஆச்சரியத்தைக் கொடுத்தது. மேலும், அழகான அக் கொலு பொம்மைகளை கலரில் வெளியிட்டுப் பரவசப் படுத்தி விட்டீர்கள்."
திருநெல்வேலி, வி. முத்தையா.

✉ "மறியல்" சிறுகதை அற்புதம். உண்மையின் வெளிப்பாடு; உன்னதமான படைப்பு. அந்தக் கதையின் ஆசிரியருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.
திருவண்ணாமலை, ஏ. ராஜேஷ்.

✉ 'க்ளகோமா' என்ற கண் நோய் எப்படி ஏற்படுகிறது? அந்த நோய் வந்தால் தெரியும் அறிகுறிகள் என்ன, அதைக் குணப்படுத்துவது எப்படி என்பது போன்ற பல பயனுள்ள தகவல்களைத் தந்து, 'க்ளகோமா' கண்நோய் பற்றி மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்திய உங்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.
மொரட்டுப்பாளையம், க. நா. இராஜேஸ்வரன்.

✉ குடும்பம் என்றால் அதில் கணவனுக்கும் – மனைவிக்கும் சமமான பங்கு உண்டு. "ஊடலில் தோற்றவர்" சிறுகதையை ஒவ்வொரு குடும்பமும் கண்டிப்பாகப் படிக்க வேண்டும்.
குமராட்சி, எம். பிரபு.

✉ ராமநாதபுரம் மாவட்டம் மாரியூரில் பிறந்து சிங்கப்பூரில் வாழ்ந்து வரும் காஜா முகைதீன் தமது ஊரில் உள்ள உறவினர்களுடன் ஃபோனில் பேச முடியவில்லை என்று வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறார். எம்.பியான என்னையும் குறைகூறியிருக்கிறார். (கல்கி, 17.9.95; பக்கம் 6) ஆனால் எனது ராமநாதபுரம் தொகுதியில்தான் மற்ற பாராளுமன்றத் தொகுதிகளை விட தொலைபேசி வசதிகளை மிக அதிகமாக உருவாக்கியுள்ளேன். மாரியூரில் இருந்து கொண்டு இன்று உலகெங்கும் தொடர்பு கொள்ளக் கூடிய ISD, STD வசதிகள் உருவாகிப் பல மாதங்கள் ஆகி விட்டன.
மதுரை, டாக்டர். வ. இராஜேஸ்வரன், எம்.பி.

✉ நீங்கள் கேட்டவை பகுதியில் ம.வே. சிவகுமார் பற்றிய பதிலில் (கல்கி, 17.9.95) ஒலித்த பெருமூச்சு தொனி தேவையற்றது. சிவகுமார் விடாமுயற்சி உள்ளவர். கல்கியில் தொடராக வெளிவந்த அவரது "பாப்கார்ன் கனவுகள்" நாவலைத்தான் தற்போது நாடகமாக அரங்கேற்றும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம்.
சென்னை, எம்.பி. மூர்த்தி.

# தக்ஷிணு வழங்கும்




**டெபாசிட் சேகரிப்பு விழா**
**27 செப்டம்பர் முதல் 14 டிசம்பர் 1995 வரை**

• பிக்சட் டெபாசிட் திட்டங்கள்

| குறைந்தபட்ச டெபாசிட் | குறைந்தபட்ச காலம் | வட்டி ஆண்டுக்கு | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| திட்டம் (அ) ரூ.10,000/-<br>திட்டம் (ஆ) ரூ.10,000/- | 1 ஆண்டு<br>1 ஆண்டு | 25%<br>21%<br>(உடனடியாக) | 1 கிராம் தங்கக் காசு<br>— |

• குமுலேட்டிவ் டெபாசிட்

| குறைந்தபட்ச டெபாசிட் | காலம் | முதிர்வடையும்போது தரப்படும் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| ரூ.10,000/- | 12 மாதங்கள் | ரூ.13,000/- | 2% |
| ரூ.10,000/- | 24 மாதங்கள் | ரூ.16,000/- | 3% |
| ரூ.15,000/- | 36 மாதங்கள் | ரூ.30,000/- | 4% |

• திருப்தி டெபாசிட் திட்டங்கள்

| குறைந்தபட்ச டெபாசிட் | காலம் | முதிர்வடையும்போது தரப்படும் தொகை | சிறப்புப் பரிசு |
|---|---|---|---|
| ரூ.25,000/- | 36 மாதங்கள் | ரூ.50,000/- | 5 கிராம் தங்கக் காசு |
| ரூ.50,000/- | 60 மாதங்கள் | ரூ.1,50,000/- | 10 கிராம் தங்கக் காசு |

• பென்ஷனர்ஸ் திருப்தி பாண்ட்

| குறைந்தபட்ச டெபாசிட் | குறைந்தபட்ச காலம் | ஆண்டுக்கு வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| ரூ.30,000/- | 3 ஆண்டுகள் | 30% | 1 கிராம் தங்கக் காசு |

• மகளிர் இன்ஸ்டன்ட் இன்டரஸ்ட் பாண்ட் *

| குறைந்தபட்ச டெபாசிட் | குறைந்தபட்ச காலம் | உடனடி வட்டி |
|---|---|---|
| ரூ.10,000/- | 1 ஆண்டு | ரூ.2,500/- |

* மேற்கண்ட சலுகை எங்கள் குமுலேட்டிவ் டெபாசிட் திட்டங்களுடன் கட்டுப்படுத்தப்பட்டது



## தக்ஷிணு பைனான்ஸ்

தலைமை & நிர்வாக அலுவலகம் : 5/1, கோபாலகிருஷ்ணா ரோடு, (ஹோலி ஏஞ்சல்ஸ் கான்வென்ட் அருகில்), தி. நகர், சென்னை - 600 017. போன் : 8250598/8278687.

கிளை அலுவலகம் : நங்கநல்லூர் : "தக்ஷிணு என்கிளேவ்" 12, 4வது மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 600 061. அண்ணா நகர் : 1958 - D3 L.P.N. டவர்ஸ், 2வது அவென்யூ, (தபால் நிலையம் அருகில்) அண்ணா நகர், சென்னை - 600 040. போன் : 6267716. ★ தாம்பரம் : 35-A, ராஜாஜி ரோடு, மேற்கு தாம்பரம், சென்னை - 600 045. ★ புரசைவாக்கம் : 216, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை - 600 007. ★ தாம்பரம், புரசைவாக்கம் கிளைகள் அக்டோபர் 4-ம் தேதி அன்று திறக்கப்படவுள்ளது.

**வளமான வாழ்விற்கு. திடமான நிதி நிறுவனம் !**

# நம்ம பிரதமருக்குக் குதிரை ஓட்டத் தெரியுமா?



• த. நா. தாங்காது!



• டென்ஷனை...



• ...உயர்த்திவிட்டார்கள்!



• நியாய - அநியாயங்கள்

● எம். பிரபு, குமராட்சி.

*? மீண்டும் ஜெயலலிதாவே ஆட்சிக்கு வந்தால்......?*

! தமிழ்நாடு தாங்காது!

● ஸ்ரீ வஹிதா மேரி, மணக்காடு.

*? சமீபத்தில், யாரைப் பாராட்ட வேண்டும் என்று உங்களுக்குத் தோன்றியது?*

! 'வி.வி.ஐ.பிகளின் (குறிப்பாக ஜெ.) ஆடம்பரங்களில் தவறில்லை' என்று தமது தீர்ப்பில் முதலில் கூறிவிட்டு, பின்னர் அது குறித்து சர்ச்சை எழுந்ததால் அவ்வரிகளைத் தீர்ப்பிலிருந்தே நீக்கும் அளவுக்குத் துணிவு பெற்றிருந்த நீதிபதி ஜகதீசனை.

● ஆர். ஸ்ரீகாந்தன், சென்னை - 53.

*? ஆனந்த்-காஸ்பரோவ் செஸ் போட்டியில் ஆட்டங்கள் தொடர்ந்து 'டிரா'வில் முடிவது சலிப்பாக இல்லை?*

! ஒன்பதாவது போட்டியில் ஆனந்தும் பத்தாவது போட்டியில் காஸ்பரோவும் ஜெயித்து ஆளுக்கு ஐந்து பாயின்ட் பெற்று உச்சகட்ட டென்ஷனுக்கு ஆட்டத்தை உயர்த்தி, 'சபாஷ் சரியான போட்டி!' என்று சொல்லும்படி செய்து விட்டார்களே! ஆட்டம் நன்றாகவே சூடுபிடித்து விட்டது!

● எஸ். மதியழகன், திருவெண்ணெய் நல்லூர்.

*? சிங்கள வாலிபர்களுக்குக் கட்டாய ராணுவ பயிற்சி தர சந்திரிகா யோசனை கூறியிருக்கிறாரே?*

! பௌத்த மதம் வலிமை பெற்றுள்ள நாட்டில் இதற்கு எதிர்ப்பு இருக்கலாம். எனினும் தவறான யோசனை என்று கூற முடியாது. தேச பக்தியை வளர்க்கக் கூடியது. ஆனால் சந்திரிகாவின் பத்திரிகை தணிக்கை உத்தரவுதான் ஜனநாயக விரோதமானது. அதிலும் அயல் நாட்டுப் பத்திரிகைகளுக்கு விலக்கு அளித்து, உள்நாட்டு இதழ் களை மட்டும் கட்டுப்படுத்தியிருப்பது அநியாயம்.

● மு. கருணாநிதி, தேவராயநேரி.

*? 'ஜெயலலிதா சக்தியின் வடிவம்; வழி காட்டும் ஒளிவிளக்கு' என சீதாராம் கேசரி கூறியிருக்கிறாரே?*

! துதி பாடும் தொற்று நோய், இந்தப் பக்கம் வரும் தில்லிக்காரர்களையும் தொற்றிக் கொள்கிறது! என்ன செய்ய...!

● வி.எஸ். ராமு, செம்பட்டி.

*? 'அமைச்சர் பதவி போய்விட்டால் ஜெயலலிதா வீட்டு வாசலைக் கூட்டுவோம்' என்று அமைச்சர் வாரன்ஸ் பேசியுள்ளது பற்றி?*

! சொன்னதை நிறைவேற்றும் காலம் நெருங்குகிறது. மக்களுக்கு அளிக்கப்படும் இந்த வாக்குறுதியையாவது நிறைவேற்றுகிறார்களா பார்ப்போம்!

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.

*? கர்நாடக ஐ.ஏ.எஸ். அதிகாரிக்கு சுப்ரீம் கோர்ட் அளித்துள்ள சிறைத் தண்டனை பற்றி?*

! உச்சநீதி மன்றத்தின் ஆணையை நிறைவேற்றாதது குற்றம்தான். ஆனால் அந்த குற்றத்தை யார் செய்தது என்று சிந்திக்க வேண்டும். அதிகாரியா? அரசியல் தலைமையா? தம் பார்வைக்கு இவ்விஷயம் கடைசி நாள்வரை கொண்டு வரப் படவில்லை என தேவ



• தொற்றிக் கொண்டது!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
சி.தெ. ரஜினி அருன்,
மணக்காடு,
பு.க. பாளையம் (வழி)
636 119, சேலம்.

கௌடா சொல்கிறார். இதை எவ்வாறு ஏற்பது!

'கோப்புகள் நம்மிடம் வரவேண்டும் என்று காத்திருக்காமல் நாமே அவற்றைக் கேட்டு வாங்கிப் பார்க்க வேண்டும்' என்று முன்பு ஒரு முறை கருணாநிதி கல்கிக்கு பேட்டி அளித்தது தான் நினைவு வருகிறது! அத்தகைய சுறுசுறுப்பு காட்டப்படாத போது அதிகாரிகள் பலிகடா ஆகிறார்கள். இதைத் தவிர்க்க, பிரிட்டனில், அதிகாரிகள் - அரசியல்வாதிகளின் எல்லைகள் வரையறுக்கப்பட்டு தெளிவாக்கப்பட்டுள்ளன. இந்தத் தெளிவான பொறுப்பு பகிர்வு நம் நாட்டில் இன்னும் செய்யப்படவில்லை.

● ஆர். சங்கரநாராயணன், குணசிலம்.

***? 'ரஜினி அரசியலுக்கு வந்தால் சினிமாவையும் இழந்து அரசியலையும் இழந்து நிற்பார்' என்கிறாரே அமைச்சர் துரை ராமசாமி?***

! ஏற்கெனவே தன்மானம் இழந்து, இப்போது அரசியலையும் இழக்கப் போகிறோம் என்ற பயமும் சேர்ந்து கொண்டிருப்பதால் அப்படிப் பேசுகிறார்.

● சி.தெ. ரஜினி அருன், மணக்காடு ❑

***? பாகிஸ்தானுக்கு ஆயுதம் வழங்குவதில் அமெரிக்காவின் ஆர்வம் குறையாதது ஏன்?***



• வித்தியாச வாக்குறுதி!



• கவலையில் பேசுகிறார்!

! அமெரிக்கப் பொருளாதாரமே ராணுவ தளவாட உற்பத்தியைப் பெருமளவுக்குச் சார்ந்துள்ளது. தனியார் உற்பத்தி செய்யும் ஆயுதங்கள் அமெரிக்க அரசுக்கு விற்கப்படுகின்றன. எனவே பாகிஸ்தானுக்கு ஆயுத விற்பனையைக் கட்டுப்படுத்திய பிரெஸ்லர் சட்டத்தைத் திருத்துவதற்கு ஏகப்பட்ட திரைமறைவு வேலைகள் நடந்திருக்கும் என்று நம்பலாம். அமெரிக்காவைக் கண்டிப்பதால் பலனில்லை; கட்டுப்படுத்தவோ நம்மால் முடியாது. எனவே அண்டை நாடான பாகிஸ்தானுடன் நட்பை வளர்த்துக் கொள்வதற்கான ராஜதந்திரத்தைக் கையாள்வதுதான் உத்தமம்.

● இ. ராதாகிருஷ்ணன், திருச்சி - 1.

***? 'வழக்கறிஞர் விஜயன் தாக்கப்பட்டது தொடர்பான வழக்கைத் தமிழக அரசு கையாண்டிருந்தால் விரைவில் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கும் என்று எஸ்.டி.எஸ். கூறியுள்ளாரே?***

! சம்பந்தமே இல்லாத மூன்று பேரைப் பிடித்து வந்து 'குற்ற'த்தை ஒப்புக்கொள்ள வைத்தார்களே, அந்த ரீதியில்தானே தொடர் நடவடிக்கை....? ஆக அற்புதமாக அதிவேகமாகச் செய்திருப்பார்கள், போங்க!

● ஈ.டி. விஜயகுமார், ஈரோடு.

***? 'எதிர்க்கட்சிகளின் சதியாலேதான் சந்திரா சுவாமி மீது களங்கம் கற்பிக்கப்படுகிறது' என்று சு. சுவாமி சொல்லியிருக்கிறாரே?***

! சந்திரா சுவாமி மீது அவருக்கு இருக்கும் அக்கறையால் பேசவில்லை; தமக்கு அமைச்சர் அந்தஸ்துடன் ஒரு பதவி அளித்த பிரதமரின் பெயரைப் பாதிக்குமே என்ற கவலை அவரைப் பேச வைக்கிறது!

● சின்னஞ்சிறுகோபு, மங்கைநல்லூர்.

***? நாற்பத்தைந்து ரூபாய் மதிப்புள்ள கல்கி தீபாவளி மலருடன் ஐம்பது ரூபாய் பெறுமானமுள்ள இலவச பரிசாமே?***

! இலக்கியத்தரமான கல்கி தீபாவளி மலரை, பல் பொடி, சோப்பு, சீயக்காய் போன்ற இலவசங்களைக் காட்டி விற்க வேண்டிய அவசியம் இல்லை. நாற்பத்தைந்து ரூபாய் மலரின் உள்ளடக்கம், விலை மதிப்பிட முடியாத அளவுக்கு இருக்கும்.

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.

***? கலவரப் பகுதிகளைப் பார்வையிடப் போன மூன்று அமைச்சர்களைப் புறக்கணித்த தன்மானம் மிக்க கொடியன்குளம் மக்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்?***

! 'ஜாதிகள் இல்லை' என ஒரு பக்கம் சொல்லிக் கொண்டு, அரசியல் காரணங்களுக்காக ஜாதிப் பிரிவினைகளை வளர்க்கும் அரசியல்வாதிகள் முதல் குற்றவாளிகள்; கலவரங்களை அடக்குவதாகக் கூறிக் கொண்டு, போலீஸ் அராஜகத்தைக் கட்டவிழ்த்துவிட்ட அதிகாரிகள் இரண்டாவது குற்றவாளிகள்; பிரச்னை தீயாக வளர்ந்தபின் ஆட்சிக்குக் களங்கம் வரப் போகிறதே என்ற பயத்தில் நீலிக் கண்ணீர் வடிக்கும் அமைச்சர்கள் மூன்றாவது குற்றவாளிகள்! மூன்றாவது பிரிவினருக்கு மட்டுமே பாடம் கற்பித்தால் போதுமா?

● பூங்கோதை குப்புசாமி, சென்னை - 78.

***? துர்க்மேனிஸ்தானில், உலகின் தலைசிறந்த ஜாதிக் குதிரைகள் இரண்டை பிரதமருக்குக் கொடுத்திருக்கிறார்களே...' அவருக்குக் குதிரை ஓட்டத் தெரியுங்களா?***

! பிரதமருக்கு அளிக்கப்படும் பரிசுகள் அவரது தனி உபயோகத்துக்கு அல்ல... அந்தக் குதிரைகளை நமது ராணுவத்தின் 'காவல்ரி' பிரிவில் சிறப்பாகப் பயன்படுத்த வாய்ப்பு இருக்கிறது.

# கல்கி தீபாவளி மலர் - 1995



வண்ணப்படம் : தேப்ரதா பானர்ஜி

## கலையும் தெய்வீகமும் களிநடம் புரியும் உன்னதத் தயாரிப்பு!

**கண்ணில் ஒற்றிக்கொள்ள....**

பரமாச்சார்யார், காஞ்சி முனிவர்கள், ஸ்ரீமன் நாராயண ஜீயர் ஆகியோரின் வண்ணப் படங்கள்.

**படித்து மனமுருக....**

ரா. கணபதி, சுகிசிவம், கமலமனராஜன், ஆனந்தி எழுதிய பக்திக் கட்டுரைகள்.

**படித்து இன்புற....**

இளம் எழுத்தாளர்களின் அருமையான சிறு கதைகள்

**என்றென்றும் நினைவில் கொள்ள....**

வைரமுத்து, தமிழன்பன், மு. மேத்தா, அப்துல் ரகுமான் பாரதி, கனிமொழி, வத்ஸலா கவிதைகள்.

**சிரித்து மகிழ....**

சுதர்ஸன், கலாசாமி, அ. குமார், விசு, வரைந்த நகைச்சுவை துணுக்குகள்.

**பார்த்து வியக்க.....**

யோகா, அமிர்தம், பார்வதீசம், தேபப்ரதா பானர்ஜி.... எடுத்த வண்ணப் படங்கள்

**சிந்தித்து அசைபோட.....**

ராஜாஜி, அக்னிஹோத்ரம் ஸ்ரீ ராமானுஜ தாதாசார்யார், எம்.வி. அருணாசலம் கட்டுரைகள்.

**ரசித்து அதிசயிக்க...**

ஊர்வசி, நாசர் வண்ணப்படங்களுடன் பேட்டி; மரியோ மிராண்டா நேர்காணல்.

விலை ரூ. 45/- பதிவுத் தபாலில் பெற ரூ. 60/-
மானேஜர், கல்கி, சென்னை - 97.

# ஜோடிக் குருவி

## உதாதிபன்

**கா**லையில் சீக்கிரமாகவே விழிப்புக் கண்டு விட்டது எனக்கு. காரணம் குருவிகளின் கீச், கீச்!

நேரம் பார்த்தேன். ஐந்து நாற்பத்தைந்து. திரும்பவும் கண்களை மூடி தூக்கத்தைத் தொடர முயற்சி செய்தாலும் அந்த சப்தம் குலைத்தது.

இது எங்கிருந்து திடீரென்று வருகிறது?

படுத்தவாறே ஒற்றைக் கையால் ஜன்னலைத் திறந்தேன். பொழுது புலரும் மெல்லிய வெளிச்சத்தில் வேப்பமரம் தெரிந்தது. அதன் உச்சியில் ஒரு கூடு. கூட்டினுள் இரண்டு குருவிகள். ஒன்றோடொன்று மூக்கை உரசியவாறே 'கீச், கீச்!'

இங்கிருந்தே "ஸ்....ஸ்" என்று கத்தினேன். பயனில்லை. எரிச்சல்தான் மூண்டது.

நான் பணிபுரிவது திருச்சியில். அங்கே மேன்சனில் தங்கியிருக்கிறேன். தினம் காலை ஐந்து மணிக்கே எழுந்தால்தான் 'க்யூ'வில் நிற்காமல் குளித்துச் சாப்பிட முடியும். ஏழு மணிக்கெல்லாம் கம்பெனி பஸ் வந்து விடும்.

ஒருவார பரபரப்பிற்குப் பின், சனிக்கிழமை மாலை கிளம்பி கிராமத்திற்கு வந்து விடுவேன். ஞாயிறு விடுமுறை. அன்றுதான் எட்டு மணி வரை சாவதானமாகத் தூங்கலாம். மறுநாள் நான்கு மணி பஸ் பிடித்து திருச்சி பயணம்.

இதுதான் நான் வேலையில் சேர்ந்த கடந்த இரண்டாண்டுகளாக நடக்கும் நிகழ்ச்சி.

ஜன்னலை மூடிவிட்டுப் போர்வையைத் தலையோடு இழுத்துப் போர்த்திக் கொண்டேன்.

'கீச்... கீச்!'

சப்தம் இப்பொழுதும் காதருகிலேயே கேட்பது போல இருந்தது. புரண்டு புரண்டு படுத்தும் விலகிய தூக்கம் வராமல் போகவே, எழுந்து கீழே வந்தேன்.

"என்ன இது அதிசயமாயிருக்கு. இந்நேரத்துக்கே எழுந்திரிச்சிட்டே?" என்றார் அப்பா. வாயில் கருவேலங்குச்சி. அம்மா கோலம் போட்டுக் கொண்டிருந்தாள்.

"வேப்ப மரத்தில் ரெண்டு குருவிங்க கத்திக்கிட்டே இருக்கு... அதான்."

"நேத்துத்தான் கூடு கட்டிச்சி. ரெண்டும் ஜோடிக் குருவிங்க போல. பிரியறதேயில்ல."

"அது என்ன குருவியோ. முதல்ல கூட்டைப் பிரிச்சி அதை விரட்டணும்" என்றேன்.

"பாவம்ப்பா" என்றாள் அம்மா.

"என்ன பாவம்? வாரத்தில ஒருநாள் இங்க வர்றப்ப தான் மனுஷன் நிம்மதியா தூங்க முடியுது. அதுவும் போச்சுன்னா எரிச்சல் வராதா?"

"வேணா இனி கீழேயே படுத்துக்கோ. மாடிக்குப் போக வேண்டாம்."

"ம்ஹூம். எனக்கு என் ரூம்தான் சௌகரியம். கூட்டைக் கலைச்சிடணும்."

"சரி... வெள்ளைச்சாமி வந்தா மரத்தில ஏறி கலைக்கச் சொல்லலாம்" என்றார் அப்பா.

வெள்ளைச்சாமி எங்கள் வயலில் வேலை செய்பவன். அன்றைக்குப் பார்த்து உடம்பு சரியில்லை என அவன் வரவில்லை.

குருவிகள் இரண்டும் நாள் முழுக்க கத்திக் கொண்டே இருந்தது. எனது ஆத்திரத்தை மேலும் அதிகப்படுத்தியது.

மறுநாள் விடியற்காலை கிளம்பும் பொழுது, "அடுத்த வாரம் நான் வர்றப்ப மரத்தில் குருவிங்க இருக்கக் கூடாது" என்று மறக்காமல் சொன்னேன்.

**மீ**ண்டும் அலுவலக சக்கரம்.

காலை பதினொரு மணிக்கு ஜி.எம். இண்டர்காமில் பேசினார்.

"மிஸ்டர் அசோக்! மெட்ராஸ்லயிருந்து அர்ச்சனான்னு ஒருத்தர் இங்க மாற்றலாகி வந்திருக்காங்க. உங்களுக்கு அசிஸ்டெண்ட் யாருமில்லேன்னு சொன்னீங்களே... இவங்களை 'போஸ்ட்' பண்ணிடட்டுமா?"

"தாராளமா சார்... தேங்க் யூ!"

இரண்டு நிமிடத்தில் அர்ச்சனா வந்தாள். இளம் மஞ்சள் நிற சேலை. ரவிக்கை. பொட்டு. முத்து மாலை, வளையல், ஒற்றை ரோஜா எல்லாமே மஞ்சள்தான். அவளின் முகம் கூட அதே நிறமாய்த் தெரிந்தது. அந்த முகத்தில் இனம்புரியாத வசீகரம்.

"குட்மார்னிங் சார்!"

"குட்மார்னிங். இப்பதான் ஜி.எம். சொன்னார். உட்காருங்க. ஐ ஆம் அசோக்!"

"தெரியும் சார்."

"எப்படி?"

"நம்மோட



கம்பெனி மேகசின்ல மாசா மாசம் கவிதை எழுதுவீங்களே. ரொம்ப நல்லாயிருக்கும் சார்."

பன்னீரில் நனைவதைப் போல் உணர்ந்தேன்.

அவள் செய்ய வேண்டிய வேலை குறித்து சுருக்கமாக விவரித்தேன். மதியம் இருவரும் கேன்டீனிற்கு ஒன்றாகப் போனோம்.

"எங்கே தங்கப் போறீங்க? லேடீஸ் ஹாஸ்டல்லேயா..."

"நோ... நோ.. எங்க பேரண்ட்ஸ் இங்கதான் சார் இருக்காங்க. அதனாலதான் மெட்ராஸ்லயிருந்து மாற்றல் வாங்கிட்டு வந்தேன்."

"அப்படியா?"

இரண்டு தினம் கழித்து என்னை அவளது வீட்டிற்கு அழைத்துப் போனாள். வெள்ளிக்கிழமை மதியம் கேன்டீனை தவிர்த்து வெளியே ஹோட்டலில் சாப்பிட்டோம்.

சனிக்கிழமை மாலை அலுவலகம் முடிந்ததும் என்னுடனேயே வந்து என்னை பஸ் ஏற்றி வழியனுப்பி விட்டுப் போனாள்.

பேருந்து பயணம் முழுக்க அர்ச்சனாவின் எண்ணமே சந்தோஷமாய் ஆக்ரமித்தது.

ஒன்பது மணிக்கு கிராமம். சூடாய் இட்லி, வெங்காய சட்னி. அம்மாவின் கை மணத்தை ருசித்துவிட்டு நிம்மதியாகத் தூங்கினேன்.

மறுநாள் சீக்கிரமாகவே விழிப்புக் கண்டு விட்டது. காரணம் அதே குருவிகள்.

ஜன்னலைத் திறந்தேன். கூட்டிற்கு வெளியே அவற்றின் தலை தெரிந்தது. சாம்பலும், கறுப்பும், கலந்த நிறம். ஆரஞ்சு நிற அலகுகள் உரசிக் கொள்ள, இரண்டும் 'கீச்... கீச்...' என்றது. தங்களுக்குள் பேசிக் கொள்கிறதோ!

சிறிது நேரம் அதனையே ரசித்துவிட்டு எழுந்து கீழே இறங்கினேன். அம்மா எதிர்ப்பட்டாள்.

"இன்னிக்கும் குருவி தூக்கத்தை கெடுத்துடுச்சா... நீ ஊருக்குப் போன அன்னிக்கே பேத்தி பிறந்திருக்கான்னு சொல்லிட்டு வெள்ளைச்சாமி வெளியூர் போய்ட்டான். இன்னும் வர்ல. அதனாலதான் கூடு அப்படியே இருக்கு. அவன் திரும்பி வந்ததும் முதல் வேலையா பிரிச்சிப் போடச் சொல்லிடறேன்."

"அந்தக் குருவிங்களை விரட்ட வேண்டாம். கூடு அப்படியே இருக்கட்டும்" என்றேன்.

அம்மா என்னை ஆச்சரியமாகப் பார்த்தாள்.

27

ஏலக்காய் பறித்துப் போடுகிற இரும்பு பக்கெட்டை கடைவீதிக்கு யாராவது எடுத்து வருவார்களா? எல்லா தொழிலாளர்களும் டொம், டொம்மென்று எஸ்டேட்டிலேயே உருட்டி விட்டு வருவார்கள். எஸ்டேட்டிலிருந்து ஏலக்காய் திருடி வருபவர்கள் அதைப் பொட்டலமாகவோ, டிபன் பாக்ஸிலோ பதுக்கி எடுத்து வருவார்கள். மிக அதிகமாகப் போனால் அரைக் கிலோ எடுத்து வருவார்கள். இப்படி ஒரு பக்கெட் ஏலக்காய் திருட விநாயகத்தால்தான் முடியும். ஒரு பொட்டலம் ஏலக்காய்க்கே அரை பாட்டில் பிராந்தி கிடைக்கும். ஒரு பக்கெட் ஏலக்காய்க்கு நாலைந்து ஃபுல் பாட்டில்கள் கிடைக்கலாம். ஒரு ஆளுக்கு நாலைந்து முழு பாட்டில்களா? அதில் ஒன்று புடுங்கு. அந்த மார்க்கெட்டில் லேசாய்க் குடித்து விட்டுக் கூடியிருந்த தொழிலாளர் கூட்டம் அந்த இரும்பு பக்கெட்டை கண்ணால் குறிவைத்தது.

விடுதலை மிகுந்த அந்த மார்க்கெட் பகுதியில் அந்த இரும்பு பக்கெட்டைப் பார்ப்பது அவர்களுக்கு எரிச்சலைக் கொடுத்தது. அடுத்த படியாக ஆறு கிலோ ஏலக்காயை ஒருவன் திருடி வருகிறான் என்பது பொறாமையைக் கொடுத்தது. மேஸ்திரியாகவுமில்லாமல், தொழிலாளியாகவுமில்லாமல், தொழிலாளியாக இருந்து கொண்டே, மேஸ்திரிபோல் அதட்டுகிற விநாயகத்தை அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவனுடைய பொட்டை அதிகாரம் கோபத்தைக் கொடுத்தது. அவன் நடையில் உள்ள பரபரப்பு, முகத்தில் உள்ள கலவரமும் அவன் ஏலக்காய் திருடிக் கொண்டு போகிறான் என்று எண்ண வைத்தது.

"அமுக்கிடலாமா?" என்று ஒருவன் கேட்க, எல்லோரும் ஒரே குரலில் "அமுக்கே" என்று கத்தினார்கள். அவன் மீது எல்லோரும் பாய்ந்தார்கள். அந்த பக்கெட்டைப் பிடுங்கினார்கள். உள்ளே இருப்பதைப் பார்த்து விட்டு, பிடுங்கிய வேகத்தில் திரும்பக் கொடுத்தார்கள். ஒருவன் கூச்சமின்றி அவன் சந்தேகத்தை வாய் திறந்து சொன்னான்.

"நீ ஏலக்காய் திருடுவேன்னு தெரியும், இன்னான்னமோ எடுத்தாறியே பக்கெட்டுல?" அவனை விட்டு விலகிப் போனான்.

குடிகாரத் தொழிலாளர்கள் அதிகமிருக்கும் பகுதியில் திருட்டுப் பொருள் வாங்குவதற்கென்று சில வியாபாரிகள் இருப்பார்கள். ஏலக்காய், களைக்கொத்தி, உர மூட்டை, பூச்சிமருந்து, ரப்பர் டியூப், பிளாஸ்டிக் பைப், பித்தளை நாசில் என்று பல பொருள்களை வாங்குவார்கள்.

ஒரு சவரன் ஆயிரம் ரூபாய் என்று கொடுத்தாலும் போதும், வாங்கிக் கொண்டு போய் விடலாம். வாங்குகிறவனுக்கும் தெரியும் இது திருட்டு நகை என்று. அதனால் காசு கொடுத்ததும் நகையை மறைத்து விடுவான். காணாமல் போக்கி விடுவான். பதினெட்டு அல்லது இருபது சவரன் நகை இருக்கும். இருபதாயிரம் காசு கிடைத்தால் போதும். கொடைக்கானல் பக்கம் ஓடி விடலாம். அங்கேயும் ஏலக்காய் உண்டு. ஏதேனும் எஸ்டேட்டில் கூலியாகவோ, மேஸ்திரியாகவோ சேர்ந்து விடலாம். கொலை என்றால்தான் வலை வீசித் தேடுவார்கள். இருபது சவரன் திருடு போனதற்கு எந்த போலீஸும் மலை, மலையாய் ஏறாது.

இன்னும் அரைமணி நேரத்தில் இருபது ஆயிரம் கிடைத்தால் போதும்! இவர்கள் யாரும் கண்டுபிடிக்க முடியாத இடத்துக்குப் போய் விடலாம். பஸ்ஸில் ஏறினால் செக்போஸ்டில் மடக்குவார்கள். நல்லதாய் ஒரு ஜோடி ரப்பர் செருப்பும், மாடர்ன் ரொட்டியும், ஜாமும் வாங்கிக் கொள்ள வேண்டும். ஒரு பாட்டில் தண்ணீர் பிடித்துக் கொள்ள வேண்டும். கிளை வெட்டுகிற பட்டாக்கத்தி வாங்கிக் கொள்ள வேண்டும். ஆறு மலை ஏறி இறங்கினால் கொடைக்கானல் மலைக்குப் போய் விடலாம். காடான பகுதி கொஞ்சம்தான். லாரி போகிற பாதைக்குப் போய் விட்டால் இன்னும் விரைவாக நடக்கலாம். அரை மணி நேரத்தில் இருபதாயிரம் கிடைக்க வேண்டும். அதுதான் முக்கியம். கிடைத்தது.

நகை வாங்கியவன் சாராயக் கடை வைத்திருப்பவன்.

"எங்கேயிருந்து திருடின இந்த நகையை?" உரசிப் பார்த்து விட்டுக் கேட்டான்.

பாலகுமாரன்

"எங்க திருடினா உனக்கென்ன, காசைக் கொடு."

"டேய்... இதை விசிறி புதர்ல போட்டுட்டு எனக்குத் தெரியாதுன்னுடுவேன். இந்த நகை யாருக்கும் இல்லாத பூடும். எவன் தேடிட்டு வருவான்னு நான் கவனமாயிருக்க வேணாமா. சொல்லு யார் நகை?"

"நாச்சியப்ப செட்டியார் ரெண்டாவது சம் சாரத்தது."

"அங்கேயே கை வெச்சுட்டியா, பதினேழு சவரன் இருக்கும்." உள்ளங்கையால் எடை போட்டான்.

வீட்டுக்குள் போய் புதுசும், பழசுமாக நோட்டுகள் எண்ணி பதினாறாயிரத்து அறுநூறு ரூபாயை வேகமாக எண்ணி பதினேழாயிரம் என்று கொடுத்தான். பொய்யனிடம் எல்லோரும் பொய்தான் சொல்வார்கள். ஒரு திருடனை எல்லாவிதமாகவும் ஏமாற்றுவார்கள். காசு வாங்கி மலையை விட்டுக் கீழிறங்கிய அரை மணியில் நாராயணனும், கதிரேசனும் அவனைத் தேடி வந்தார்கள்.

"பக்கெட் நிறைய நகை இருந்ததுன்னா, துட்டு இருந்தது. ஒண்ணும் புரியலை, நகர்ந்துட்டோம். நான்தான் செட்டியார் புள்ளைகிட்டே சொல்லுடான்னு ஆளு அனுப்பிச்சேன்.



நகையை சாராயக்காரன்கிட்டே கொடுத்துட்டுப் போறான் போலருக்குது. வினாயகம் இல்லாம சாராயக்காரன்கிட்ட போகாதே. வினாயகத்தை மடக்கினு வா. தோ இப்பத்தான் போறான். இப்படித்தான் போறான்."

"பஸ்ல போனா போன் பண்ணி அடி வாரத்துல மடக்கிடுவாங்கன்னு காட்டு வழியா நடந்து போறான். அவன் காடு பழக்கமானவன். நீ சின்னப் புள்ளை, பாத்துப் போ."

டார்ச்சும் கம்பளியும் கதிரேசன் எடுத்துக் கொள்ள, வீச்சரிவாளை வீட்டிலிருந்து நாராயணன் எடுத்துக் கொண்டான். அவர்கள் தேடிக் கொண்டு ஓடினார்கள். அரை மணி ஓட்டத்திற்குப் பிறகு காடு இறுகிக் கொண்டு வந்தது. கிளைகளை வெட்டிக் கொண்டு ஆள் போயிருப்பது தெரிந்தது.

"இனி ரொம்ப இறக்கம், ஏணியில முதுகு காட்டி இறங்குற மாதிரி இறக்கம். ஏணி முப்ப தடி, நாப்பதடி இருக்கும். இது மலை. நானூறு, ஐந்நூறு அடி இருக்கும். கால் தவறினா சிதறு காய்தான். அவனை வேற விதமா பிடிக்கலாம் வுடு." நாராயணன் சமாதானப்படுத்தினான்.

இந்த நானூறு அடிக்குப் பிறகு மறுபடியும் பள்ளத்தாக்கு வருகிறது. ஒரு சமதளம் போல் பாதை போகிறது. இறங்கி நடையை வேகமாக்கினால் வினாயகத்தைப் பிடித்து விடலாம். இதற்கு மேல் தொடர மாட்டார்கள் என்கிற நம்பிக்கையில் அவன் நிதானமாய்க் கூட நடந்து போகலாம், எங்கேனும் இளைப்பாறலாம். இதில் ஒரே ஒரு கவலைதான். இந்த வழியே போனவன் வினாயகமாக இருக்க வேண்டும். போனவன் வேறு யாராவதாக இருந்தால் சகலமும் விரயம்.

இயற்கையால் செதுக்கப்பட்ட மலை விளிம்புகளில் கதிரேசன் கால் வைத்து இறங்கினான். நாராயணன் பின் தொடர்ந்தான். பார்த்துப் பார்த்து கால் வைத்து இறங்கப் பதினைந்து நிமிடங்களாயின. சமதளம் தொட்டு கதிரேசன் ஓடினான். அவன் வெறி நாராயணனுக்கு வியப்பாக இருந்தது. கதிரேசன் சட்டென்று நின்று புதர் மறைவில் உட்கார்ந்து கொண்டான். நாராயணன் அதைப் பார்த்து விட்டுத் தயங்கினான். மெல்ல, கதிரேசனைத் தாண்டி முன்னேறினான்.

"இன்னா நாராயணா இன்னா வேணும்?" இருபது கெஜ தூரத்தில் வினாயகம் ஓடுவதற்குத் தயாராக இருப்பது தெரிந்தது.

"நீ பாட்டுக்கு பாதி லவுட்டிகினு வந்துட்ட. எனக்கும் கொஞ்சம் குடுத்துட்டுப் போடா."

"இன்னாது பாதி?"

"கொள்ளை அடிச்சியே அந்து துட்டு. எனக்கும் கொஞ்சம் கொடுத்துட்டுப் போ. கொடுக்காம ஓடின உன்னைத் துரத்தித் துரத்தி வெட்டுவேன்."

"உனக்கெதுக்குக் கொடுக்கணும்?"

"அந்த கதிரேசு என்னை வேலையிலிருந்து எடுத்திட்டான். இனி நான் எவ்விட போய் பொழைக்கறது. நான் எடுக்கணும்னு நினைச்சதை நீ எடுத்திட்டா நான் கம்மா வுடும்மா."

"என்கிட்ட ஒண்ணுமில்லை. எல்லாம் சாராயக்காரன்கிட்ட கொடுத்துட்டேன்."

"அவன்தான் சொன்னான் உனக்குக் கத்தை, கத்தையா காசு கொடுத்ததை. எனக்குக் கொஞ்சம் கொடு." முதுகு பக்கத்திலிருந்து வீச்சரிவாளை எடுத்தான். நிதானமாய் நெருங்கினான். புதர் நடுவே கதிரேசன் அசையாது உட்கார்ந்து சகலமும் கேட்டுக் கொண்டிருந்தான்.

"எனக்கு எண்ணாயிரம்தான் கிடைச்சது." இன்னும் நகர்ந்து கொண்டே வினாயகம் சொன்னான்.

"அப்ப பேர்பாதி கொடு."

"நீ கொஞ்சம்தானடா கேட்டே."

"அடபுடா,ன்னா வெட்டிப்புடுவேன். எனக்குப் பேர்பாதி கொடு."

"என்கிட்ட எண்ணாயிரம்தான் இருக்கு."

"கள்ள நாயே நான் அதை சோதிச்சுப் பார்க்கணும்டா."

"டேய், கிட்ட வந்த கொன்னுடுவேன்." வினாயகம் கீழே கிடந்த கல்லை எடுத்துக் கொண்டான்.

"முட்டாள் நீ இன்னா துப்பாக்கியா காட்டுறே. அந்த மாதிரி கல்லு என் காலு கீழேயும் இருக்குடா."

"நான் பேர் பாதி தரேன் என்னை விட்டுறு."

"எடுத்துக் கீழே வை."

கொத்தாய் ஒரு பிடி கரன்ஸியை வினாயகம் தூக்கிக் காட்டினான். நாராயணனை விளிம்புகளில் கால் வைத்து முப்பதடி உயரத்துக்கு ஏறச் சொன்னான். விளிம்பில் கால்வைத்து ஏறுவது எளிது, இறங்குவது கடினம். இறங்குகிற தாமதத்தில் வெகு தூரம் ஓடி விட முடியும். நாராயணன் பின்னடைந்து புதரில் மறைந்திருந்த கதிரேசனைத் தாண்டி மலையின் செதுக்கல்களில் கால் வைத்து ஏற, வினாயகம் கதிரேசன் இருப்பது தெரியாமல் தாண்டி வந்தான். நோட்டு கற்றையைக் கீழே வைப்பது போல் குனிந்தான். காசை பக்கென்று பையில் போட்டுக் கொண்டு நாலைந்து பெரும் கற்கள் எடுத்து நாராயணனை நோக்கி முழு பலத்துடன் வீசினான்.

ஒரு ஏணியின் மீது நிற்பவனைப் போன்று மலைச் சரிவில் நின்று கொண்டிருந்த நாராயணன் முதுகில் இரண்டு பாறை. கற்கள் முழு பலத்துடன் தாக்கின. வலி தாங்காது நாராயணன் அலறினான். அரிவாள் நழுவியது. பட்டுப் பட்டு மண்ணில் சொத்தென்று விழுந்

# சின்முத்ரா

உங்கள் முதலீட்டிற்கு பூரண பாதுகாப்பை அளிக்கும் ஒப்பற்ற நிதி நிறுவனம்

## சங்க நிதி

உங்கள் முதலீட்டிற்கு

**24%**

வருட வட்டியை வழங்குகிறது.

### எங்களது சிறப்பு அம்சங்கள்

- குறைந்த பட்ச முதலீடு ரூ.5,000/-
- டெபாசிட் செய்வோருக்கு 3% ஊக்கத் தொகை
- அறிமுகப்படுத்துவோருக்கு 1% ஊக்கத் தொகை
- பென்சன்தாரர், வயது முதிர்ந்தோர், அறக்கட்டளை ஸ்தாபனங்களுக்கு 1.5% ஊக்கத் தொகை அளிக்கிறது.

வட்டிக்கும் அசலுக்கும் பின்தேதியிட்ட காசோலைகள் முன்னதாக வழங்கப்படும்

## 'பத்ம நிதி'

'பத்ம நிதி' வைப்பு நிதி பத்திரத்தில் முதலீடு செய்யுங்கள் !

குறைந்தபட்ச முதலீடு
ரூ.10,000/-

காலம்
36 மாதங்கள்

திரும்பப் பெறும் தொகை
ரூ.20,000/-

**RUSH FOR ATTRACTIVE & REMUNERATIVE SCHEME SUITS FOR ALL**

ரூ. 250 பிரதி மாதம் 18 மாதங்களுக்கு மட்டும் செலுத்துவீர். தங்க புதையலை வென்றிடுவீர்

எங்கள் சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து தங்கள் தேவையை பூர்த்தி செய்து கொள்ளும் எளிமையான திட்டங்கள் காலம் 20 மாதம் மாதம் ரூ.500/ சேர்ந்து 2 மாதம் ஆனவுடன் ரூ.5000 வரை கடன் பெறும் வசதி.

கடனுக்கு வட்டி ஏதும் இல்லை.

## சின்முத்ரா ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மேண்ட்ஸ்



112, முதல் மாடி, இராமகிருஷ்ண மடம் சாலை,
(இராணி மெய்யம்மை உயர்நிலைப் பள்ளி எதிரில்)
மந்தைவெளி, சென்னை - 600 028.
(ஞாயிறு விடுமுறை)

*சின்முத்ரா - உங்கள் வளர்ச்சிக்கான பாதை !*



## அறிவிப்பு!

8.11 முதல் 8.15 வரை மின்தடங்கலும், 8.16 முதல் 8.20 வரை இயந்திரக் கோளாறும், 8.22 முதல் 8.27 வரை நிர்வாகக் கோளாறும் ஏற்பட்டது என்பதை அறிவித்துக் கொள்கிறோம்.

- சீர்காழி வி.ரேவதி

---

தது. வினாயகம் அரிவாளை நோக்கி ஓடுகையில் கதிரேசன் குபீரென்று புதர் மறைவிலிருந்து எழுந்தான். சிறுத்தை போல வினாயகத்தை நோக்கி ஓடினான். வினாயகத்தின் மீது பாய்ந்து அவனைக் கீழே தள்ளினான். முழு பலத்துடன் அவனை முகத்தில் குத்தினான். வினாயகம் உதறி விலகிக் கொலை வெறியோடு பட்டாக்கத்தியை வீசியபடி முன்னேறினான். மலைக் கற்களை எடுத்துக் கதிரேசன் அவன் மீது எறிய வினாயகம் புதர்களின் நடுவே ஓடி தன்னை மறைத்துக் கொண்டான். 'அவனும் கற்கள் பொறுக்கி வீசினான். பூசணிக்காய் அளவு பாறைகளை தூக்கிப் போட்டான். நாராயணன் மெல்ல கீழிறங்குவதைப் பார்த்து அவன் மீதும் நாலைந்து கற்கள் எறிந்தான். இடதுபக்கமாய் இறங்குகிற நாராயணனையும், வலதுபக்கமாய் நெருங்குகின்ற கதிரேசனையும் கற்களால் தாக்கினான்.

பெரிய மிருகம் கண்டு மிரளுகின்ற குரங்கு போல் கத்திக் கத்தி அலைந்து அலைந்து சண்டை செய்தான்.

நாராயணனின் இடதுபக்க முதுகில் தாங்க முடியாத வலி ஏற்பட்டது. எலும்பு விரிசல் விட்டது போல இடதுகை கொஞ்சம் அசைந்தாலும் வலி துடிக்க வைத்தது. அந்த துடிக்க வைக்கும் வலி கோபம் கொடுத்தது.

அதிகம் அசைக்காமல் இடதுகையை உடம்போடு ஒட்டி வைத்துக் கொண்டான். வலது கையால் வீச்சரிவாளை எடுத்தான். வினாயகத்தை நோக்கித் திரும்பினான்.

இந்த முறை வினாயகத்தின் கல் நாராயணன் நெஞ்சைத் தாக்கியது. நாராயணன் வெறி அதிகரித்தது. கதிரேசன் நிறைய கற்கள் பொறுக்கி சட்டையில் ஏந்திக் கொண்டு வினாயகத்தை இடைவிடாது தாக்க, வினாயகம் முகத்துக்கு எதிரே பையைப் பிடித்தபடி குனிந்து கொள்ள, தன்னைக் கவனிக்காத அந்த இடைவெளியில் நாராயணன் வெறிபிடித்தவன் போல் பாய்ந்தான். கோபம் மட்டுமே முழு முதல் குணமாயிருக்க வீச்சரிவாளை ஒரு சுழற்றுச் சுழற்றி வினாயகத்தைத் தாக்க, வினாயகம் குனிந்து கொள்ள வீச்சரிவாள் வினாயகம் தலையைக் கொய்து தரை நோக்கியிறங்கியது.

மனித ரத்தம் குபீரென்று பொங்கிய வேளையில் தலை தட்டென்று தரை தொட்டு உருண்டு பக்கவாட்டில் நின்றது.

ஒருகணம் வினாயகத்தின் தலை பூமியில் இடக்காது வைத்து ஏதோ ஒரு சத்தத்தை கேட்டு வியப்பது போல் தோன்றியது. வலது கை பட்டா கத்தியை நழுவ விட, இடது கை பணப்பையை இறுக்கிப் பிடிக்க மூன்று தப்படிகள் தள்ளாடியபடி உடம்பு நடந்து விட்டு பொத்தென்று குப்புற விழுந்தது. இன்னும் ரத்தம் பொங்கியது. இலைகளை, புற்களை, எறும்புகளை நனைத்துத் தவிக்க வைத்தது.

நாராயணன் அரிவாளை பூமியில் ஊன்றி ஒரு பாறையில் உட்கார்ந்து கொண்டான். கண்களை மூடிக் கொண்டான். கதிரேசன் முன்னேறி காலால் வினாயகத்தின் உடம்பு புரட்டினான். அவன் பையைப் பிடுங்கினான். மெல்ல நடந்து கண் மூடிக் கிடந்த நாராயணன் தோளில் கை வைத்தான்.

"கவலைப்படாதே, நானிருக்கேன்." அவன் தலையை தடவிக் கொடுத்தான்.

நாராயணன் வீச்சரிவாளை வாங்கி, சிறிது தூரம் நடந்து போய் ஒரு பள்ளத்தாக்கில் வீசினான். அடர்த்தியான செடிகளுக்கு நடுவே போய் அந்த அரிவாள் விழுந்தது.

"ஒரு கையால புடிச்சு ஏறிடு நாராயணா. உன்னை ஒட்டினாப் போல நான் வரேன். களைப்பா இருந்தா என் தோள்ல, என் தலையில கால் வைச்சுக்க. இருட்டறதுக்குள்ள மேல ஏறிடலாம்."

கிட்டத்தட்ட நானூறு அடி உயரமுள்ள செங்குத்து மலைப் பகுதியை கதிரேசன் முட்டுக் கொடுத்த தெம்பில் வெகு நிதானமாய் நாராயணன் கடந்தான். கதிரேசன் முகத்தில், முதுகில், தோளில், தலை உச்சியில் பலமுறை கால் பதித்து நின்றான். கதிரேசன் ஒரு சின்ன சிலும்பல் செய்திருந்தால் கூட நாராயணன் பிடி நழுவ பலத்த அடிபட்டிருக்கும். மரணம் ஏற்பட்டிருக்கும். உச்சிக்கு வந்து இரண்டு பேர் மல்லாந்து கிடந்தார்கள். இருட்டும் வரை காத்திருந்தார்கள்.

**நா**ராயணனுக்கு வலியில் ஜுரம் வந்து விட்டது. பயமோ, கலவரமோ, தப்பான செடியை மிதித்த காரணமோ நாராயணன் உடம்புக்குள் குளிரெடுத்தது. உடம்பு தூக்கிப் போட துவங்கியது. தூக்கிப் போடும் போது கை அசைய நாராயணன் வலியில் கத்தினான்

கதிரேசன் தன் இடுப்பு பெல்ட்டை அவிழ்த்து நாராயணன் இடதுகையை அவன் உடம்போடு சேர்த்துக் கட்டினான். அவன் வலது கையை தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டான். இருண்ட நேரத்தில், மார்க்கெட் முற்றிலும் தூங்கிப் போன நேரத்தில் அவர்கள் காரில் ஏறிக் கொண்டார்கள். வண்டியை திருப்பி கதிரேசன் அடிவாரம் நோக்கி ஓட்டினான். போடிநாயக்கனூர் டெர்மினஸ் நோக்கி வந்தான். ஒரு தனியார் மருத்துவமனையில் நாராயணனைப் படுக்க வைத்தான். மரம் முறிந்து முதுகில் விழுந்து விட்டது என்றான்.

காட்டுக்குள் ரத்தவாடை காற்றில் மிதந்து வருவதை செந்நாய்கள் உணர்ந்தன. வாடை வரும் திசையை நின்று நின்று முகர்ந்து மெல்ல ஓடின. துண்டு பட்டுக் கிடக்கிற பிணத்தை வட்டமாய் சுற்றிக் கொண்டன. அசைகிறதா, எதிர்ப்புண்டா என்று அமைதியாய் காத்துக் கிடந்தன. ஒரு பெரிய செந்நாய் தாவி ஓடி கழுத்துப் பகுதியைக் கவ்வி தசையைக் கடித்து இழுத்தது. வாயில் வைத்த தசையோடு வானம் பார்த்து ஊளையிட்டது. பல செந்நாய்கள் பாய்ந்தன. தங்கள் கூர்மையான பற்களை அந்த உடம்பின் எல்லா பகுதியிலும் பதிய வைத்தன.

**ப**கவதி சிரித்தான். மரணம் ஒரு நொடிப் பொழுதுக்கும் குறைவான நேரத்தில் நிகழ்ந்து விடுகிறது. உயிர் உடம்பிலிருந்து ஒரு தள்ளு கதவிலிருந்து வெளிவருவதைப் போல் வந்து விடுகிறது. அப்படிப் போகும் முன் திரும்பிப் பார்த்துத் திகைக்கிறது. இதையா பெரிய விஷயம் என்று எண்ணியிருந்தோம் என்று தன் உடம்பைப் பார்த்து வியக்கிறது. பிறகு விலகி வேறு ஒரு உலகில் நுழைகிறது. அங்கும் திகைப்பு. அந்த இடமும் முடிவான முடிவல்ல.

உடலைத் தான் என்று கொண்டது போல, உயிரையும்தான் என்று கொள்ளும் புத்தி குடியிருக்கும் மனம் உயிரைச் சுற்றிக் கொண்டிருக்கும். மறுபடி ரூபம் கேட்கும். எல்லாம் மறந்து போக வேண்டும். மனதை இங்கேயே உடம்புக்குள்ளேயே விட்டுப் போக வேண்டும். மனதை உடம்பிலேயே விட்டுப் போவதற்கு, உடம்புக்குள் உயிர் இருக்கும்போதே முயற்சி செய்ய வேண்டும். மெல்ல மெல்ல உலகத் தோடு அறுத்துக் கொள்ள வேண்டும். இங்கிருந்தபடியே இங்குள்ளவற்றோடு தொடர்பு அற வேண்டும். தொடர்பு அறுந்தால்தான் அலையும் எண்ணம் நிலைப்படும். எண்ணமற்ற தன்மைதான் மனம் அற்ற நிலை. உடம்பு சாவதற்கு முன், மனம் செத்துப் போனால் நல்லது. அப்போது மனம் தொடராது; மறு ஜென்மம் கேட்காது.

எண்ணமற்ற நிலையின் ஆரம்பம் விருப்போ, வெறுப்போ இல்லாத தன்மை. வேண்டும் வேண்டாம் என்கிற பிரிவினை இல்லாத நிலை. பகவதி திறந்து கிடந்த பீரோவைப் பார்த்தான். மூடி வைத்தான். மாடுகளுக்கு நடுவே போய் வைக்கோலில் படுத்துக் கொண்டான்.

**"ஃபே**ர்லைன்கிராக். இடது முதுகு மேல் பட்டை எலும்புல ஒரு ரெண்டரை அங்குலத்துல. ஆனாலும் வலியிருக்கும். இடுப்போடு கையைக் கட்டியது சரியான முதலுதவி. இப்ப மாவு கட்டு கூட அப்படித் தான் போடப் போறோம். இருபது நாள் கை அசையாத இருக்கணும். அப்புறம் இன்னொரு எக்ஸ்ரே எடுத்துட்டு சாதாரண கட்டு போடணும். ஆன்ட்டிபயாடிக், பெயின் கில்லர், ஜுரத்துக்கு மாத்திரை எல்லாம் சாப்பிடணும். நாளை காலையில டிஸ்சார்ஜ் ஆயிடலாம். இது டீலக்ஸ் ரூம், ஒரு நாளைக்கு நானூறு ரூபாய்."

ஏஸி ரூமில் நாராயணன் கட்டிலில் தூங்க, கதிரேசன் சோபாவில் சாய்ந்தான். தூக்கம் வராமல் ரிஸப்ஷனுக்கு வந்தான். அடுத்த டீலக்ஸ் ரூமிலிருந்து யாரோ எட்டிப் பார்த்தார்கள்.

"உங்களுக்கு ஆங்கிலம் தெரியுமா?" என்று கேட்டார்கள்.

"தெரியும்."

"எண்ணெயே இல்லாத சுக்காரொட்டி எங்கே கிடைக்கும்?"

"இந்தப் பகுதியில் கிடைப்பது கடினம்."

"ஏன்?"

"தென்னிந்தியர்கள அதை விரும்புவது இல்லை."

"தெரியாமல் என் மனைவியை இந்தப் பகுதிக்குக் கூட்டி வந்து விட்டேன். இவர்கள் செய்கிற சப்பாத்தியை அவளால் ஒரு துண்டு கூட சாப்பிட முடியவில்லை. நேற்றிலிருந்து சரியாக சாப்பிடவில்லை. அரிசி அவளுக்குப் பிடிக்காது."

"அடடே..." கதிரேசன் யோசித்தான்.

"இந்த ஆஸ்பிடல் சமையலறைக்கே நான் கூட்டிப் போகிறேன். அவர்களாகத் தயார் செய்து கொள்வார்களா?"

"நல்ல யோசனை. ஆனால் இப்போது இரவு பதினொரு மணி. முடியுமா?"

"முயற்சிப்போம், உங்களுக்கென்ன உடம்பு?"

"எனக்கோ, என் மனைவிக்கோ எந்த உடம்புமில்லை. ஹோட்டலில் இடம் கிடைக்கவில்லை. அதனால் ஆஸ்பிடலில் ஏஸி ரூம் எடுத்தோம். இது ஹோட்டலை விட பாதுகாப்பாக உள்ளது. நான் காப்பி வாங்க வந்திருக்கிறேன். உங்களுக்கு காப்பியை பற்றி ஏதாவது தெரியுமா?" அந்த வட இந்தியன் ஆங்கிலத்தில் கேட்டான்.

அந்த ஆஸ்பத்திரி சமையலறையில் சில சப்பாத்தி இட்டுக் கொள்ள கதிரேசன் அனுமதி வாங்கிக் கொடுத்தான்.

(தொடரும்)

# “காதல்... காதல்...”

கல்லூரிக்குச் சென்று கொண்டிருந்த நர்மதா பழக்கமான குரல் கேட்டுத் திரும்பினாள். அங்கே அசோக் நின்று கொண்டிருந்தான். சற்று தூரத்தில் அவனுடைய யமாஹா.

“என்ன அசோக்.. இங்க நின்னுக்கிட்டு இருக்கீங்க...”

“எல்லாம் உங்களுக்காகத்தான்...” கண்கள் சிரிக்கச் சொன்னான். நர்மதா பதற்றமாய்ப் பார்த்தாள்.

“புரியலையா... அப்பா இந்தப் புத்தகத்தை உங்க அப்பாகிட்டே கொடுக்கச் சொன்னாரு. வீடு வரை போய்த்தான் கொடுக்கணும். அதான் முறை. ஆனா... வழியிலே உங்களைப் பார்த்திட்டேன்... உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லையே...”

அப்பொழுதுதான் அவன் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்தாள்.

அவனுடைய அப்பா கருணாகரனும் அசோக்கின் அப்பா குமரேசனும் பால்ய கால நண்பர்கள். இருவரும் சரித்திர நாவல பைத்தியங்கள். அவர்களுக்குள் புத்தகப் பரிமாற்றங்கள் செய்து கொள்வது வழக்கம். புத்தகம் கொடுக்கவோ அல்லது வாங்கவோ சில தடவை அசோக் அவளுடைய வீட்டிற்கு வந்துள்ளான்.

“என்னங்க... அமைதியாய் இருக்கீங்க... ஸாரி... உங்களுக்கு சிரமம் போல...” என்றான்.

“நோ... நோ... ஒண்ணும் சிரமமில்லே... நீங்க கொடுங்க. கொடுத்திடறேன்...”

அவன் நீட்டிய புத்தகத்தைப் பெற்றுக் கொண்டு, “சரி காலேஜ்க்கு டயமாயிடுச்சி வரட்டுமா...” என்றாள்.

“தேங்க்ஸ், வாங்க...” என்று விலகினான்.

அந்த நேரம் பார்த்து பிரேமா வந்தாள். நர்மதாவை நெருங்கி, காதோடு காதாய் முகம் வைத்து,

“யேய்... யாருடி அது ரோமியோ... பாய்பிரண்டா...” என்று கண்சிமிட்டிக் காது வரை புன்னகை செய்தாள்.

“ச்சீ... போடி! அவரு எங்க அப்பாவோட பிரண்டுடி... ரெண்டு பேரோட அப்பாக்களும் பால்ய கால சினேகிதங்க... ரெண்டு பேரும் சரித்திர நாவல்களை ரொம்ப ஆர்வமா படிக்கிறவங்க... அதான் அப்பாகிட்டே கொடுக்கச் சொல்லி புத்தகம் கொடுத்திட்டுப் போறாரு...” என்றாள் நர்மதா.

“யேய் அசடு... புத்தகத்தைப் பிரிச்சுப் பாரு.. அதுல ஏதாவது லவ் லெட்டர் இருக்கப் போவுது. நீ பாட்டுக்கு அதைக் கொண்டு போய் உங்கப்பாகிட்டே கொடுத்திடப் போறே?” என்றபடி அவளுடைய கையிலிருந்த புத்தகத்தைப் பிடுங்கி புரட்டிப் புரட்டிப் பார்த்தாள்.

“பிரேமா வர வர உனக்கு புத்தி தட்டுக் கெட்டுப் போவுது. அவரப் பார்த்தா நல்லவராத் தெரியுது...”

“ஏன்... நல்லவருக்குக் காதல் வராதா? அவருக்கு நீ சர்டிஃபிகேட் கொடுக்கிறதைப் பார்த்தா... எனக்கென்னமோ சந்தேகமா இருக்கு...” என்று ஒரு மாதிரியாகப் பார்த்துச் சிரித்தாள்.

“ஒரு பெண்ணும் ஆணும் பேசினா, பழகினா உடனே லவ் வந்திடுமா... ஒரு ஆணை ஒரு பெண் நல்லவன்னு சொன்னா உடனே அவளுக்கு அவன் மீது காதல் இருக்கணுங்கிறது அவசியமா என்ன?”

“ஆமா நீ காரைக்கால் அம்மையாரு மாதுரா டயலாக் பேசாதே... பார்த்தால் ஆள் நல்லா இருக்காரு, வசதியான வீட்டுப் பையனாத் தெரியுது, ரெண்டு பேமலிக்கும் பழக்கம் இருக்கு. பேசாம அவரையே நீ லவ் பண்றதுதான் பெட்டர்னு தோணுது...”

"ச்சீ... போடி..." என்று செல்லமாய் அவளுடைய முதுகில் அடித்தாள்.

ஆனால், அடிக்கடி ஏதாவது சாக்கு வைத்துக் கொண்டு வீட்டுக்கும் கல்லூரி வாசலுக்கும் அவன் வந்த போதுதான், 'பிரேமா சொன்னது உண்மையாக இருக்குமோ? அந்த அசோக் மனசில் இது மாதிரி ஏதும் எண்ணம் இருக்குமோ...' என்று குழம்பினாள்.

அன்று கல்லூரி விட்டு பிரேமாவுடன் வேறு ஏதோ பேசிக் கொண்டே வந்த போது தான் நர்மதா கவனித்தாள், தன்னுடைய யமாஹாவுடன் அசோக் காத்திருப்பதை.

"யேய்... உன்னோட ரோமியோ உனக்காகக் காத்திருக்காரு... நான் எதுக்கு உங்களுக்கு இடைஞ்சலா இருக்கணும்..." என்றபடி முன்னோக்கி வேகமாய் நடந்தாள் பிரேமா.

என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பினாள் நர்மதா.

அதற்குள் அசோக் நர்மதாவை அணுகி, "நல்லாயிருக்கீங்களா?" என்றான்.

"என்ன அசோக், நீங்க செய்யறது உங்களுக்கே நல்லா இருக்கா..."

"என்ன சொல்றீங்க?"

"இதுமாதிரி அடிக்கடி... நீங்க கல்லூரி வாசலுக்கு என்னைத் தேடிக்கிட்டு வந்தா.. எனக்கு எவ்வளவு தர்மசங்கடமா இருக்கும்னு நினைச்சுப் பாருங்க..."



"அது.. வந்து... உங்களைப் பார்க்காம இருக்க முடியலைங்க... பிளீஸ் நர்மதா... என்னைப் புரிஞ்சுக்க முயற்சி பண்ணுங்க..."

"நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு எனக்குப் புரியலை..."

ஒரு நிமிடம் மௌனமாய் கண்களை உயர்த்தி அவளைப் பார்த்தான்.

"நிஜமாகவே புரியலையா நர்மதா?" என்றான்.

சாலையில் போக்குவரத்து பெரும் இரைச்சலாய்க் கேட்டது.

"உங்களிடம் நான் நிறையப் பேச வேண்டியதிருக்கு... அதுக்கு இந்த இடம் லாயக்கில்லை.. வாங்க, பக்கத்து ஹோட்டல்ல காப்பி சாப்பிட்டுக்கிட்டுப் பேசலாம்..." என்றான்.

தூரத்தில் இருந்து பார்த்துக் கொண்டிருந்த பிரேமா, இவளிடம் 'ஜமாய் ஜமாய்' என்பதாக ஜாடை காட்டினாள்.

'என்னதான் சொல்லப் போகிறான்...?' குழப்பமாய் அவனைத் தொடர்ந்தாள். காப்பிக்கு ஆர்டர் பண்ணிவிட்டு, "என்ன நர்மதா இவ்வளவு குழப்பமா இருக்கீங்க... இயல்பா இருங்க..."

"என்னமோ சொல்லணும்னு சொன்னீங்களே அசோக்."

"என்னைப் புரியலையா உங்களுக்கு...?"

"என்ன புரியணும்? என் அப்பாவோட நண்பரோட பையன். எனக்குத் தெரிஞ்சு நீங்க நல்லவரு... அதுக்கு மேலே எனக்கெதுக்கு உங்களைப் பற்றிப் புரிஞ்சுக்கணும்..."

அவன் அடிபட்டதைப் போல பார்த்தான்.

எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் தடுமாறினான்.

"அதென்னவோ தெரியலை நர்மதா... எனக்கு சதாசர்வ நேரம் உங்க ஞாபகம்தான்... என்னுடைய ஒவ்வொரு மூச்சும் உங்க பேரைத் தான் சொல்லுது. ப்ளீஸ் மறுக்காதீங்க. ஐ லவ் யூ..." என்றான். வேர்த்துக் கொட்டியது அவனுக்கு.

அவள் திடுக்கிட்டு, கையிலிருந்த புத்தகத்தைத் தவற விட்டாள். பட்டென எழுந்து வெளியே வந்து விட்டாள்.

இன்னும் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்த பிரேமா நெருங்கி, இவளைப் பார்த்து, "ஹேய்... என்னாச்சு... உன்னோட ஆளு என்ன சொன்னாரு... காப்பி வாங்கிக் கொடுத்தாரா?" என்றாள்.

"ச்சே! இந்த ஆண்களே சுத்த மோசம். ஹோட்டலுக்குப் போனதும் எப்போதும் உன் நினைப்புதான்... ஐ லவ் யூ... அப்படி இப்படின்னு புலம்பறான்..." என்றாள் கோபத்துடன்.

"எதுக்காகக் கோபப்படறே நர்மதா... தன் மனசுல உள்ள ஆசையைப் பூட்டி வைக்காம சொல்லி இருக்காரு... பார்க்கப் போனா பேசாம நீ அவரை லவ் பண்ணிடலாம்... நானா இருந்தா அப்படித்தான் நடந்துக்குவேன்..."

"லூசு மாதிரி பேத்தாதே... லவ்வுங்கிறது உள் மனசின் அடி ஆழத்திலேர்ந்து வெளிப்படற சமாசாரம். கண்டதும் காதல் வருமா என்ன?"

"நீதான் லூஸ் மாதிரி பேசுறே... சரி எவ்வளவு நாள் பழகினா உனக்கு அவர் மீது காதல் வரும்..."

"என்னடி கேட்குறே..."

"நீ அவரை வெறுக்கலே... அவரு உன்னை விரும்புறாரு. நீ வேற யாரையும் லவ் பண்ணலை. அப்ப உங்க காதலுக்கு எது தடை? எனக்கு சுத்தமா புரியலைடி..."

"மனசு... மனசுதான் தடை. எம்மனசுல அவரைக் காதலரா நினைக்க முடியலை.."

"போடி... மனசாம் மனசு. மனசை தூக்கிக் குப்பையிலே போடு. தானா வர்ற ஸ்ரீதேவியை எட்டி உதைக்காதே... உனக்கு இப்ப இதோட அருமை தெரியாது... உனக்கு வரன் பார்த்து, அவன் கேட்கிற சீதனத்தைக் கொடுத்து, உன்னைக் கரையேத்த முடியாம தவிக்கிற போது, அடடா அசோக்கை விட்டுட்டோமேன்னு மனசு தவிக்கும். அப்போதும் இதே மனசுதான்... உன்னைக் குத்திக்காட்டும்..." பிரேமா தெளிவாய்ச் சொன்னாள்.

அவளுக்குப் பொட்டில் அறைந்தது மாதிரி இருந்தது. 'தங்களை விட உயர்ந்த அந்தஸ்துதான் அசோக்கின் குடும்பத்தினருக்கு. பிரேமா சொல்வதில் தவறு ஏதும் இல்லையே என்று நினைத்துக் குழம்பினாள்.

## அருள்வாக்கு



வைஷ்ணவர்களுக்கு ஸ்வாமி வேறே, புஸ்தகம் வேறே; சைவர்களுக்கு ஸ்வாமியே வேறே, புஸ்தகம் வேறே என்று சொன்னாலும் உண்மை அப்படி அன்று. இப்போது இருக்கிறவர்களுடைய மனோபாவத்தைக் கவனித்தால் அது வேறு மதம், இது வேறு மதம் என்று சொல்லக் கூடிய ஹேது வளர்ந்திருக்கிறதே தவிர, அவர்களுடைய முதல் நூல்களைப் பார்த்தோமானால் உண்மை தெரியவரும். சைவத் திருமுறைகள், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்கிற இரண்டையும் பாடினவர்கள் தங்களது நூலே முதல் நூல் என்று சொல்லவே இல்லை, நினைக்கவே இல்லை. அவர்கள் தங்களை மதஸ்தாபகர்களாகவும் நினைத்துக் கொண்டதேயில்லை. அவர்கள் காலத்துக்கு முந்தியே ஒரு மதம் இருந்திருக்கிறது. ஆழ்வார்கள் பாடுவதற்கு முந்தி வைஷ்ணவம் இருந்திருக்கிறது. நாயன்மார்களுக்கு முந்தியும் சைவம் இருந்திருக்கிறது. இவற்றுக்கு முதல் நூல் எது என்று பார்த்தால்

மறைகள் தாம்; அதாவது வேதங்கள். சைவர்கள் ஈசுவரனையே,

'வேதமோ டாறங்க மாயி னானை
வேதநாதன், வேதகீதன், ஆரணன்காண்'

என அநேக இடங்களில் சொல்கிறார்கள். வைஷ்ணவ நூல்களிலும் இப்படித்தான், 'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லியிருப்பதை நாம் சரியாகக் கவனித்தால் இவ்விருவருக்கும் மூலப் புஸ்தகம் ஒன்றே என்பது தெளிவாகும். இப்போது சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் முக்கியமாக இருக்கிற தேவாரமும், பிரபந்தமும் ஒரே பொது மூலமான வேதத்தை ஆதாரமாகக் கொண்டு உண்டானவையே. தேவாரத்தையும் பிரபந்தத்தையும் பாடிய மகான்கள் எங்கு பார்த்தாலும் வேதத்தின் பெருமையையே பேசுகிறார்கள். எந்த க்ஷேத்திரத்தை வர்ணித்தாலும், 'அங்கே வேத ஒலி மிகுந்திருந்தது; ஹோமப் புகை மிகுந்திருந்தது; வேதம், அதன் அங்கங்கள் எல்லாம் தழைத்திருந்தன' என்று பரவசமாகச் சொல்கிறார்கள். ஸ்வாமியைப் பற்றிச் சொல்கிற அளவுக்கு வேதத்தைப் பற்றியும் சொல்கிறார்கள்.

வேதம் ஒரே தத்துவத்தைப் பல மூர்த்திகளாக்கித் தந்திருக்கிறது. வேதம் என்கிற நதியில் இந்த ஒவ்வொரு மூர்த்தி வழிபாடும் ஒரு துறை மாதிரி. 'வேத நெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்க' என்று இதையே சேக்கிழார் ஸ்வாமிகள் சொல்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.

என்னுடைய மகாத்மா பட்டம் பிரயோசனம் இல்லாதது. என்னுடைய வெளி நடவடிக்கைகளுக்காகவும் அரசியலில் என்னுடைய பங்குக்காகவும் தான் இந்தப் பட்டம். அரசியல் என்னுடைய கடைசிப் பட்சமான பகுதிதான். ஆகவே அது அதிசீக்கிரமாக மறைந்து விடக் கூடியதாகும். சத்தியம், பிரம்மச்சரியம், அஹிம்சை ஆகியவற்றை நான் வலியுறுத்துவதுதான் நின்று நிலைக்கக் கூடிய தகுதியுடையது. அதுதான் என் உண்மையான பகுதி. எனது நிரந்தரமான அந்தப் பகுதி, எவ்வளவு சிறியதாக இருந்தாலும், அதை அலட்சியம் செய்வதற்கில்லை. எனக்குச் சகலமும் அதுதான்.

ஆதாரம் : "புலனடக்கம்" என்ற மகாத்மாவின் நூல்.

தகவல் : கி. மனோகரன்

வீட்டிற்குள் நுழைந்ததும் அம்மா கேட்டாள், "என்ன இந்த அசோக் அடிக்கடி உன்னைப் பார்க்க காலேஜ் பக்கம் வர்றானாமே..."

"அது வந்தும்மா..."

"அப்பா பஸ்ல வரும் போது நீங்க ரெண்டு பேரும் பேசிக்கிட்டு இருந்ததைப் பார்த்தாராம்..."

"சும்மா சாதாரணமா... பிரண்ட்ஸ் மாதிரிதான்..." தயக்கமாய்ச் சொன்னாள்.

அதற்குள் பின்கட்டிலிருந்து வந்த அவளுடைய அப்பா, "ம்... அசோக் நல்ல பையன்... நம்ம பொண்ணு அதிர்ஷ்டம் பண்ணி இருந்தா அவனையே புருஷனா அடைஞ்சிக்கலாம்... அவனென்ன வெறும் பிரண்ட்ஷிப்பாத்தான் உன் கூட பழகுறானா?" என்று கேட்டார்.

என்ன சொல்வது என்று புரியாமல் நின்றாள்.

"நம்ம பொண்ணுக்கு அந்த சாமர்த்தியமெல்லாம் எங்கே இருக்கப் போறது... இவளுக்கு வரன் பார்த்துக் கல்யாணம் செய்யணும்னா எவ்வளவு சீர் செனத்தி செய்யணும்? அதுக்கெல்லாம் ஏதாவது சேமிச்சி வச்சிருக்கமா...?"

அவளுக்கு நினைக்க நினைக்க அழுகையாக வந்தது.

'இங்கே காதலுடன் பொருளாதாரமும் இணைந்துள்ளது. இதே அசோக் இன்றி வேறு சாதாரண ஒருவனிடத்தில் பேசியிருந்தால் இந்நேரம் வீட்டில் பெரிய ரகளையே ஏற்பட்டிருக்கும். காதலாவது கத்திரிக்காயாவது என்று அப்பா வானத்துக்கும் பூமிக்குமாகக் குதித்திருப்பார்.. இப்படி குடும்ப மானத்தை வாங்கிட்டியேடி.. தலைநிமிர்ந்து நடந்துக்கிட்டு இருந்த எங்களைத் தலைகுனியும்படி பண்ணிட்டியேன்னு அம்மா அழுதிருப்பாள்... பணக்கார வீட்டுப் பையன் தன் மகளை நேசிப்பது இப்பொழுது சந்தோஷம் தரும் விஷயம்; மெச்சிக் கொள்ளும் விஷயம்... தன் பெண் அதிர்ஷ்டசாலி, சாமர்த்தியசாலி என்று புகழப்படுவாள். இங்கே இயல்பான காதலும் பணத்திற்காகக் கொச்சைப்படுத்தப்படுகிறதா?'

நினைக்க நினைக்க நர்மதாவுக்கு வேதனையாக இருந்தது.

"அசோக் ரொம்ப நல்ல பையன்... வெரி வெரி ஸ்மார்ட்..."

"யேய்... நர்மதா அந்தப் பையன் உன்னைத் தேடிப் பேச வந்தா பயந்துக்கிட்டு ஓடி வந்திடாதே.. ஒவ்வொரு பொண்ணுங்க எவ்வளவு தைரியமா போகுதுங்க, வருதுங்க... நீயும் தைரியமா பேசணும்..." என்றாள் அம்மா.

அம்மா, அப்பாவின் பேச்சுக்கள் அவளுக்கு அருவருப்பைத் தந்தன.

அடுத்த நாள் மாலை கல்லூரி விட்டு வெளியில் வரும் போது அசோக்கை கவனித்தாள்.

கையால் ஜாடை செய்து அருகே அழைத்தாள். அவன் வெகு ஆவலுடன் அவளை அணுகினான்.

"மிஸ்டர் அசோக்! எனக்கு உங்க மீது அன்போ, பாசமோ, லவ்வோ ஏதும் இடையாது... இது மாதிரி தினம் தினம் காலேஜ் வாசல்ல வந்து நிக்கிறது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கலை... உங்க பிஹேவியரைக் கொஞ்சம் மாத்திக்கங்க..." கோபமாய் பேசி விட்டு விடுவிடுவென்று சென்று விட்டாள்.

அவன் திகைத்துப் போய் நின்றான்.




தற்செயலாய் பம்பாய் சிவப்பு விளக்குப் பகுதியில் போய மாட்டிக் கொள்ளும் ஒரு பெண்ணை, சென்னைக்கு மீட்டுக் கொண்டு வருகிறார் ஒரு போலீஸ் அதிகாரி. அவளையே திருமணமும் செய்து கொள்கிறார். பின்னர் தான் பிரச்னையே. சமூகம் அவளை விலை மாதாகவே பார்க்க, எப்படி அன்பை விளக்கிப் புரியவைப்பது என்று தெரியாமல் இருவரும் தவிக்கிறார்கள்.

அழுத்தமான கதையை ஒழுங்காகச் சொன்னால் அப்புறம் கோடம்பாக்கத்து மதிப்பு என்னாவது? உப்பு - காரத்துக்காக ஒரு பம்பாய் வில்லன். ஹீரோயினைத் துரத்திக் கொண்டு அவன் சென்னை வருவதும், படம் முழுக்க பூச்சி காட்டி விட்டு இறுதியில் மண்டையைப் போட, மூன்றெழுத்து.

கதையில் குறையிருந்தாலும் ஒவ்வொரு கேரக்டருக்கும் இருக்கும் உயிரோட்டம் ஈடுசெய்கிறது. ஜெயராமும் குஷ்பூவும் புரிந்து நடித்திருக்கிறார்கள். முக்கியமான கேரக்டர் வைஷ்ணவிக்கு. கஸ்தூரி கூட சோபிக்கிறார்.

அடிதடி, பாட்டு என்று அங்கங்கே வந்து போனாலும் கதையம்சம்தான் ஹீரோ. வசனங்கள் எளிமை, கூர்மை. பொத்தாம் பொதுவான பரபரப்பு இல்லை. நிறுத்தி, நிதானமாய் ஒவ்வொரு கேரக்டரின் பின்னணிக்கேற்ப வசனங்கள்.

பாடல்கள் தியேட்டரில் கேட்க இனிமையாக இருந்தாலும் வெளியே வந்ததும் மறந்து விடுகின்றன.

கோலத்தின் ஒரு முக்கியப் புள்ளி, காமிரா மேன். மனுஷன் கதையோடு ஒன்றிப் போயிருக்கிறார். காமெடி என்று ஒரு கழுத் தறுப்பு இல்லை. சங்கவி இருந்தாலும் கவர்ச்சி இல்லை. வில்லன் இருந்தாலும் வெறி இல்லை.

டைரக்டர் ஐ.வி.சசியிடம் கோலம் போட நம்மவர்கள் கற்றுக் கொள்ளலாம்.

— துளசி

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

